# கம்பன் மணி மலர்

சுக்ல 1990

64-3








கம்பன் புகழ்பாடிக்
கன்னித் தமிழ் வளர்ப்போம்




# கம்பன் மணி மலர்

# 1990



---

சுக்ல பங்குனி 24 உ முதல் 27 உ வரை

1990 ஏப்ரில் 6 ஏப்ரில் 9 வரை நிகழ்ந்த

## 52 ஆவது கம்பன் திருநாள் வெளியீடு

---

கம்பன் கழகம்

கம்பன் மணி மண்டபம், காரைக்குடி-623 002

## உள்ளுறை

64-3

## முன்னுரை

கம்பன் ஓர் உலக மகாகவி; கவிச்சக்கரவர்த்தி; காப்பிய வானில் கதிரவனாக நின்று ஒளிர்பவன்; இவன் கல்லாத கலையும், வேதக்கடலும், உலகில் இல்லை எனலாம். ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவன் நம் கம்பன்.

கம்பனுக்கு ஆண்டுதோறும் விழா எடுத்து மகிழ்கின்றோம். இந்த விழாவை எவ்வித மான சாதி, சமய, மொழி, கட்சி வேறுபாடின்றி எல்லோரும் ரசித்து மகிழுமாறு ஓர் இலக்கிய விழாவாகவே கொண்டாடி வருகின்றோம்.

ஆனாலும் ஆண்டுதோறும் பல்வேறு வகையில் தலைப்புகள் வகுத்து நிகழ்ச்சிகளை அமைத்தாலும் அவை கூறியதையே மறுபடியும் வேறு கோணத்தில் கூறுவதாகவே அமைந்து வருகின்றதை அறிவோம்.

கம்பன் அடிப்பொடியின் தனி மனித சாதனையாலும் தற்காலத்தில் தொலைக்காட்சி போன்ற கருவிகளின் பயனாலும் கம்பராமாயணம், மகாபாரதம் போன்ற நூல்களின் செய்திகள், படித்தவர் பாமரர் எல்லோருக்கும் நன்கு சென்றடைந்துள்ளது.

இதனால் இந்த இதிகாசங்களுக்கு ஏற்படவிருந்த, மறைந்தும் — மறந்தும் போவதற் கிருந்த ஆபத்துகள் நீங்கி இவற்றைப் பாதுகாப்பதாகிய செயலை நாம் நன்கு செய்து வெற்றி கண்டு விட்டோம் என்றே தோன்றுகின்றது. இனிமேல் இந்த இந்தியக் காவியங்களை எவராலும், எப்பொழுதும் அழிக்க இயலாது என்பது உறுதியாச்சு.

ஆனாலும், இதனால் இந்தக் காவியங்கள் நம் இந்திய நாட்டுக்குள்ளே தான் நன்கு பிரபலமாகியுள்ளதே தவிர பிற மாநிலங்களிலும், பிற நாடுகளிலும் இன்னும் பரவவில்லை. குறிப்பாகவும், சிறப்பாகவும் கம்பன் எழுதிய இராமகாதையைப் பிறநாட்டு நல் அறிஞர்களும் அறிந்து போற்றுமாறு, இக்காவியத்தை உலகில் உள்ள பிறமொழிப் புலமையுள்ள தமிழர்கள் கம்பனை வெளியுலகத்திற்கு அறிமுகப்படுத்த வேண்டும்.

மேலும் இந்தக் காவியத்தை வெறும் இலக்கிய நோக்கோடு மட்டும் பார்க்காமல், விஞ்ஞானம், மருத்துவம், புவியியல் — போன்ற எல்லாக் கோணங்களிலும் கண்டு ஆய்வு செய்து, இதற்குள் மண்டிக்கிடக்கும் புதுமைகளை வெளிக்கொண்டு வரக் கம்பன் கழகங்கள் முயல வேண்டும்.

இந்த நோக்கத்தோடு இனி நாம் கம்பராமாயண காவியத்தை அணுகுவோமாக.

அண்மைக் காலங்களில் கம்பன் விழா மேடைகளில் கம்பன் காவியத்தை வாணிகப் பொருளாகவும் ஆக்கி வருவதோடு தெரிந்தோ, தெரியாமலோ இவற்றிற்கெல்லாம் ஆதார ஸ்ருதியாக இருந்த கம்பன் அடிப்பொடி அவர்களைக் கம்பன் மேடைகளில் சிறுகச்சிறுக மறந்து வருகின்ற நன்றி யின்மையையும் கண்டு வருந்த வேண்டியுள்ளது. சடையன் இன்றேல் கம்பன் இல்லை! கம்பன் அடிப்பொடி இன்றேல் இராம கதை இல்லை! இதை உணர்வோமாக.

இந்த 52வது மலர் உங்கள் கரங்களில் மணம் பரப்புகின்றது. இஃது எல்லா வகை யிலும் சிறப்புற்று வெளிவருவதற்கு உதவி செய்தோர், விளம்பரங்கள் தந்தோர், அனைவருக்கும் நன்றி கூறுகின்றோம். இம்மலரை உரிய காலத்தில் சிறப்புற அச்சிட்டு உதவிய மதுரை வேன்கார்டு அச்சகத்தார்க்கு உளமார்ந்த நன்றி.

கம்பன் கழகம்
கம்பன் மணி மண்டபம்
காரைக்குடி.

அன்புள்ள
ஜி. கே. சுந்தரம்
தலைவர்



64-3

# அரையும் காலும்

அரை நூற்றாண்டுக் காலத்திற்கும் மேலாக கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்த்த கம்பன் அடிப்பொடி அவர்களைப் பற்றி அறியாதார் உண்டோ? ஆனால் அவர்தம் பல்துறைப் புலமையையும் கூர்த்த நுண்ணறிவையும் அறிந்தோர் சிலரே. ஏனெனில் என்றைக்குமே விளம்பரம் வேண்டாத குடத்து விளக்கு அவர்கள். அவர்களிடம் தனிப்பட்ட முறையிலும், பொது இடங்களிலும் உரையாடிய போது அன்பர்கள் பலர் அறிந்து கொண்ட அருமைகள் மிக நுணுக்கமானவை மட்டுமல்ல, மிகுந்த நயமுடையவையும் கூட.

எவ்வளவோ தடவை பலர் அவர்களிடம் கேட்டுக் கொண்டும், அவர்கள் அவற்றை எழுத்தில் வடித்ததோ அல்லது நூல் வடிவில் கொண்டு வர முயன்றதோ இல்லை. ஆனால் அதிருஷ்டவசமாக அவர்கள் பல்வேறு காலங்களில் வானொலி, குடநீராட்டு விழா மலர்கள், விழாக்கள் இவற்றுக்காக எழுத்தில் வடித்த, அச்சில் வராத கட்டுரைகள் பலபல இறையருளால் நம்மிடம் கிடைத்தன. அவற்றில் சிலவற்றைத் தொகுத்து ''கட்டுரைக் களஞ்சியம்'' என்ற பெயரில் ஒரு நூலாய் 1988ல் கம்பன் திருநாள் பொன் விழாவை யொட்டி வெளியிட்டோம்.

எஞ்சிய கட்டுரைகளில் சிலவற்றை அன்பர்கள் யாவரும் படித்து இன்புற வேண்டும் என்ற பேரவாவினால் இவ்வாண்டுக் கம்பன் திருநாளையொட்டி வெளியிடப் பெறும் இக் கம்பன் மணி மலரில் வெளியிடுவதில் பெருமையும், பெருமகிழ்ச்சியும் அடைகிறோம். இவற்றை இதுபோது வெளியிடக் கொடுத்து வைத்தது எங்கள் பெரும் பேராய்க் கருதி மகிழ்கிறோம்; நீங்களும் மகிழ்வீர்கள்!

கம்பன் அடிப்பொடி என்றாலேயே கம்பனில் ஊறித் திளைத்தவர்கள் என்று தான் பலர் அறிவார்கள், ஆனால் அதற்குச் சற்றும் குறையாது வேறு பல இலக்கியங்களிலும் ஆர்வமும் அக்கறையும் கொண்டவர்கள் அவர்கள் என்பதைப் பின்வரும் கட்டுரைகளைப் படிப்பவர்கள் உணர்வார்கள். வேறு இலக்கியங்கள் மட்டுமல்ல, தொல்பொருள் ஆய்வு, சிற்பம், ஆகமம், வைதிகம், இசை, நிருத்தியம், நளபாகம் போன்ற பல்வேறு துறைகளிலும் சிறந்து விளங்கியவர்கள். அவற்றையெல்லாம் வரும் தலைமுறையினர் வாசிக்கவாவது கொடுத்து வைத்திருக்க வேண்டும், என்றே இவற்றை அச்சில் கொண்டு வந்துள்ளோம்.

இத்தகைய அறிவுக் கருவூலம் இன்று நம்மிடையே இல்லையென்றாலும், அவர்கள் விட்டுச் சென்ற வழியில் கம்பன் புகழ் பாடுவதன் மூலம் நாம் எல்லோரும் கன்னித் தமிழ் வளர்த்திடுவோம்; அவர்கள் ஆரம்பித்துச் சென்ற பணியை விடாது தொடர்ந்து நடத்திடுவோம்; அதுவே அவர்களுக்கு நாம் செய்யும் நெஞ்சம் நிறைந்த அஞ்சலியாகும்.

அதற்கு ஒரு உதாரணத்தை இங்கே பெரும் நிறைவோடு எழுதுகிறோம். அவர்களின் ஆசியோடும் ஆதரவோடும் புதுச்சேரியில் தொடங்கப் பெற்ற கம்பன் கழகம் இவ்வாண்டு வெள்ளி விழாக் காண்கின்றது. வெள்ளி விழாக் காணும் புதுவைக் கம்பன் கழகம் அவர்கள் வித்திட்ட பயிர்; இன்று அது தழைத்துப் பல்கிப் பெருகிப் பேரால மரமாய் ஓங்கி நிற்பதே அத்தகையதோர் ஆத்மார்த்தமான அஞ்சலியாகும்.

அவர்கள் இருந்திருந்தால் மனங்களிய, நா இனிக்க, வாய் மணக்க வாழ்த்தி மகிழ்ந்திருப்பார்கள். பொன் விழாக் கண்ட கம்பன் அன்பர்கள் நாம் எல்லோரும் சேர்ந்து, கால் நூற்றண்டாய்ப் பணியாற்றி வெள்ளிவிழாக் காணும் புதுவைக் கம்பன் கழகத்தை

''மலர்க! மணக்க!''
''வாழ்க! வளர்க!''
''ஓங்குக! உயர்க!''

என்று பல்லாண்டு பல்லாண்டு பாடி மகிழ்ந்திடுவோம். கம்பன் அன்பர்கட்கு, அடிப்பொடியின் அடியொற்றித் தொண்டாற்றுபவர்களுக்கு இதை விட வேறென்ன பெரும் நிறைவு கிட்டி விட முடியும்?

கம்பன் கழகம்
கம்பன் மணி மண்டபம்,
காரைக்குடி.
6-4-1990

கம்பன் பணியில்,
மு. மெ. முத்துராமன்
கம்பன் அடிசூடி
செயலாளர்.

# கம்பன் கழக உறுப்பினர்கள்

தலைவர் :

திரு. ஜி. கே. சுந்தரம்

உபதலைவர் :

திரு. க. கு. கோதண்டராமன்

செயலாளர் :

திரு. மு. மெ. முத்துராமன்,
கம்பன் அடிகுடி

உதவிச் செயலாளர் :

திரு. ச. கம்பராமன்

பொருளாளர் :

திரு. அ. திருநாவுக்கரசு

உறுப்பினர்கள் :

திருவாளர்கள்

1. மெ. செ. மெ. மெ. சொக்கலிங்கம் செட்டியார், காரைக்குடி
2. சா. நா. அ. சொ. அ. அண்ணாமலை செட்டியார், காரைக்குடி
3. என். ஏ. மாரிமுத்து பிள்ளை, காரைக்குடி
4. ராம. கண்ணப்பன், நாட்டரசன்கோட்டை
5. மு. சிதம்பரம், காரைக்குடி
6. எம். எஸ் சுந்தரம் பிள்ளை, பாளையங்கோட்டை
7. ந. கோவிந்தசாமி, புதுவை
8. வெ. அருணாசலம், மலாக்கா
9. வி. என். சிதம்பரம், ராங்கியம்
10. ஆர். கே. சுப்பிரமணியன், காரைக்குடி
11. பெ. மு. சுப்பையா செட்டியார், ஆத்தங்குடி
12. பழ. சண்முகம், காரைக்குடி
13. நா. மெய்யப்பன், காரைக்குடி
14. அரு. நாகப்பன், ஒ. சிறுவயல்
15. அள. சுப்பையா, காரைக்குடி
16. அள. வீரப்பன், காரைக்குடி
17. ராம. தெ. முருகப்பன், காரைக்குடி
18. ப. மு. சித. பழநியப்பன், காரைக்குடி
19. எஸ். ஏகப்பன், நாட்டரசன்கோட்டை
20. ராம. சொக்கலிங்கம், காரைக்குடி
21. ப. சு. ராம. அண்ணாமலை செட்டியார், காரைக்குடி
22. சுப. சித. சுப்பிரமணியன், காரைக்குடி
23. ஆ. ம. ஸ்ரீதரன், இரகுநாதபுரம்
24. சா நா. நாராயணன், காரைக்குடி
25. பழ. முத்தையா, காரைக்குடி
26. வெ. பழநியப்பன், தில்லி
27. எஸ். முனுசாமி, காரைக்குடி
28. அரு. லெட்சுமணன், காரைக்குடி
29. நா. பழநியப்பன், காரைக்குடி
30. லெ. கணேசன், காரைக்குடி
31. மெ. காந்தி, காரைக்குடி
32. சரசுவதி, இராமநாதன், பள்ளத்தூர்
33. வை. கண்ணுச்சாமி, தஞ்சை
34. சித. ஆதப்பன், வடலூர்
35. பி. மூக்கையா, காரைக்குடி

''முன்னமருட் கம்பனெனும் நாமம் கேட்டான்
    மூர்த்தியவன் இராமகாதை முழுதும் கேட்டான்
பின்னருள்ள சான்றோர்கள் பேசக் கேட்டான்
    பேர்த்துமவன் சேவடிக்கே பிச்சன் ஆனான்
அன்னையுடன் அத்தனுமே கம்ப னென்றான்
    அவன்பெயராய்த் தன்பெயரை ஆக்கிக் கொண்டான்
தன்னைமறந் திட்டான்தன் நாமம் கெட்டான்
    தலைப்பட்டான் சேர்ந்திட்டான் தலைவன் தாளே.''

— கவிஞர் சொ. சொ. மீ. சுந்தரம்



‘‘நின்னாவார் பிறரன்றி நீயே ஆனாய்;
நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்து மானாய்’’

‘‘Who can say more than this rich praise that
you alone are you?’’

**त्वमेव माता च पिता त्वमेव,**
**त्वमेव बन्धुश्च सखा त्वमेव,**
**त्वमेव विद्या द्रविणं त्वमेव,**
**त्वमेव सर्वं मम देव देव ॥**

‘‘நின்னை வணங்கி, நீவகுத்த நெறியில் நிற்கும் அதுஅல்லால்
என்னை அடியோம் செயற்பால?’’

ஆண்டவன் அருளால், முற்பிறப்பில் நாம் செய்த புண்ணியத்தின் பயனாய்ப் பகுத்தறிவு படைத்த மனிதர்களாய்ப் பிறந்திருக்கிறோம். அன்னை, தந்தை, ஆசான் இவர்கள் வழியாகப் பற்பல செய்திகளையும், இயல்புகளையும், மெய்மைகளையும், உண்மைகளையும் தெரிந்துகொள்ளுகிறோம். அவற்றை அடிப்படையாகக் கொண்டு நாம் மேலும் கற்கத் தொடங்குகிறோம். இதையே கற்பு - கல்வி - கற்றல் என்ற பெயர்களால் குறிப்பிடுகிறோம்.

எதற்காக மக்கள் கற்க வேண்டும்? உண்மையை உணரவும், உணர்ந்த வழிநின்று உய்யவுமே! இல்லையா? உண்மை எது? என்றும் உள்ளதுவே உண்மை! உன் என்னும் பகுதியடியாக ஆனதுதானே "உண்மை" என்னும் ?சொல்? அன்று, இன்று, அங்கு, இங்கு என்று கூறி ஒருகால எல்லையில் அல்லது ஓர் இட எல்லையில் அடக்கிவிட முடியாதபடி என்றும் எங்கும் நின்று நிலவுவதே உண்மை. இதையே 'சத்யம்' என்பர் வடநூலோர்.

எனவே கடவுளை, கடவுளின்-உண்மையை உணரவே கற்கிறோம் அல்லது கற்க வேண்டும் என்பது தெளிவாகிற தல்லவா? எல்லாம் வல்ல-எங்கும் நிறைந்த-எதனுள்ளும் அடங்கிய-எதையும் தன்னுள் அடக்கிய ஒரு தனிப்பொருளை இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன் என்று வாதிட்டுப் பூசல் புரிய வேண்டாம். அவரவர் பக்குவத்திற்கும் தேவைக்கும், விருப்பிற்கும் அதற்கும் மேலாக அவரவர் மரபுக்கும் ஏற்ப எப்பெயராலும், எவ்வுருவாலும் அப்பரம் பொருளை உரைத்தும் அமைத்தும் பயனடையலாம்தானே?

இந்த நோக்கோடுதான் அறம் செய்தளித்த வள்ளுவப் பேராசான், ஆதிபகவன், வாலறிவன் மலர்மிசை ஏகினான், வேண்டுதல் வேண்டாமை இலான், இறைவன், தனக்குவமை இலாதான், அறவாழி அந்தணன் எண்குணத்தான், என்பன போன்ற பொதுப் பெயர்களால் கடவுளைக் குறிக்கலாயினார். இதை மனத்துட் கொண்டு வாழவேண்டியவர்கள் நாம்; எனவே தான்,

கற்க; கசடு அறக் கற்க; கற்பவை கசடு அறக்கற்க! கற்றபின் நிற்க அதற்குத்தக!

என்று அழுத்தமாகக் கூறுகிறார் வள்ளுவர்.

விருப்பு—வெறுப்பு; தன்நெறி, பிறநெறி; உயர்வு—தாழ்வு போன்ற கசட்டுத்தனங்களெல்லாம் நம்மை விட்டகலுமாறு கற்கத் தக்க, கற்கப்படவேண்டிய, அறநூல்களை - அருள்நூல்களை - மெய்ந்நூல்களைக் கற்க - அதாவது ஆழ்ந்து தோய்ந்து ஆய்க! என்று சொல்லுகிறார். வாழ்க்கை கற்பதற்காகத் தானா? அல்ல; வாழ்வதற்காக! ஆகவே தான், கற்றுக் கொண்டே காலத்தைப் போக்கிவிடலாகாது என்று எச்சரிப்பதைப் போல கற்றபின் என்று ஒரு சொல்லைப் போடுகிறார். ஆம்; அப்பா! சில ஆண்டுகள் விழுந்து விழுந்து கற்றாயே, அது தீர்ந்ததல்லவா? இனி நீ கற்ற காலத்தில் ஒன்றை உணர்ந்தாயே அதுதான் அது! உண்மை; சத்யம்; கடவுள் என்பதெல்லாம் 'அது' தான், இனி அதற்குத் தக்கபடி அதாவது கடவுளுக்கேற்ப அறத்தை - அன்பைக் கடைப்பிடித்து உறுதியாக நின்று வாழ்!'' என்கிறார், கட்டளையாக! ஆம் அறக்கட்டளை அது!

கற்க, கசடற, கற்பவை; கற்றபின்
நிற்க அதற்குத் தக!

இந்தக் கருத்தை வள்ளுவப் பெருமான் தொடக்கத்தில் இரண்டாவது குறளில் இன்னும் அழுத்தமாக விளக்கியருளுகிறார்.

''மாசேபடியாத இறைவனின், தீமையே இல்லாத திருவடிகளைத் தொழுது வழிபடாதார் எவ்வளவு கற்றிருந்தாலும் பயன் என்ன இரவெல்லாம் சருகு சேர்த்ததை அன்றிக் கூதல் காயாமல் போனவன் கதைதான் இல்லையா?

''கற்றாரை யான்வேண்டேன்,''
காரணம் என்ன?

''கற்பனவும் இனி அமையும்''
அப்படி என்றால்?

இனி கற்கின்ற வேலை முடிந்தது!
பின் இனி செய்வது என்னவோ
ஸ்வாமி?

''குற்றாலத்து அமர்ந்துறையும்
கூத்தா! நின் குரைகழற்கே
கற்றாவின் மனம் போலக்
கசிந்துருக வேண்டுவனே!''

சொன்னவர் யார்? சிவமே ஆன மணிவாசகப் பெருந்தகையே!

எனவே, கடவுளை நம்பி, கடவுளை வழிபட்டுக் கடமையை ஆற்றி வாழ்வாங்கு வாழ வள்ளுவனார் குறளறத்தைக் கடைப் பிடிப்போமாக!

# நீத்தார் பெருமை

அறநூல்கள் பலவற்றும் வள்ளுவப்பேரா சான் வகுத்தருளிய 'முப்பால்' என்றும் தலைமையாய் உள்ளது. யாப்பு அமைதி கருதி அதைக் 'குறள்' என்பர்; அதன் சிறப்பினை எண்ணி அதைத் 'திருக்குறள்' என்று போற்றியுரைக்கும் உலகம்.

அதில் 133 அதிகாரங்கள் உள. ஒவ் வோர் அதிகாரமும் பத்துப்பத்துக் குறட் பாக்களைக் கொண்டு விளங்கும். முப்பாலில் 1330 அருமையான குறள்வெண்பாக்கள் உள்ளன. அறநூல்களுள் எப்படி திருக் குறள் சிறந்து விளங்குகின்றதோ அப்படி திருக்குறளில் நீத்தார் பெருமை சிறந்து விளங்குகிறது.

திருக்குறள் நூலில் மூன்றாவதாக உள் ளது நீத்தார் பெருமை என்னும் அதிகாரம். எல்லாப் பற்றுக்களையும்-கட்டுக்களையும் - உறவுகளையும்-ஆசைகளையும்-யான் எனது என்னும் செருக்கினையும்-விருப்பு வெறுப்புக் களையும் விட்டொழித்தவர்கள் யாரோ அவர் களே ''நீத்தார்'' ஆவர். அவர்களின் சிறப்பை நமக்கெல்லாம் புலப்படுத்த உள்ளதே ''நீத்தார் பெருமை''

தற்காலத்தில் நீத்தார் என்றால் இறந் தவர் என்றே பலரும் கருதுவர். உலக வாழ்வை விட்டுச்சென்றவர் என்ற பொருளில் இறந்தவரை நீத்தார் என்று சொல்வது தவ றில்லை. ஆனால், இங்குக் கூறப்படும் நீத் தார் இறந்தவர்கள் அல்லர். உலக பந்த பாசங்கள் அனைத்தையும் விட்டு நீங்கி விடு தலை பெற்றவர்களே இவர்கள். இவர்களை கீதை ஸ்திதப் பிரக்ஞர்கள் என்று சொல் லும். அதாவது, அசையாத-நிலையான முழு நிறை அறிவுடையவர்கள். இவர்களையே நீத்தார் என்று வள்ளுவனார் கூறுகின்றார்.

கடவுளையும், கடவுளை வழிபடும் நெறியையும், அதனால் எய்தும் பயனையும் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நாற் பொருளையும் உலகிற்கு உணர்த்த வல்லார் மெய்ஞ்ஞானம் கைவரப் பெற்ற நீத்தார் களே ஆனதால், கடவுள் வாழ்த்துக்கும் வான் சிறப்பிற்கும் அடுத்து நீத்தார் பெருமை இடம் பெறலாயிற்று!

''ஒழுக்கத்து நீத்தார் பெருமை, விழுப் பத்து
வேண்டும் பனுவல் துணிவு''

என்பது நீத்தார் பெருமையில் முதற்குறள். அற ஒழுக்கத்திலே நிலையாக நின்று, உலக பந்த பாசங்களை முற்றும் விலகி விட் டொழித்துள்ளவர்களின் சிறப்பே சிறப்புக்கள் அனைத்தினும் சிறந்த சிறப்பு என்று எல்லா நூல்களும் முடிந்தமுடிவாக விரும்பிப் போற்றுகின்றன.

பனுவல்-என்று பொதுவாகக் கூறியமை யாலே எம்மதத்தையும் எக்கொள்கையுடை யாரையும் தனித்துக்குறிக்கவில்லை. முற்றும் துறந்த மெய்ஞ்ஞானிகளைப் பாராட்டு வதில் எந்த நூலும் ஒன்றிற்கொன்று சளைப்ப தில்லை. ஆதலால் எல்லாவற்றையும் குறிக் கும் வண்ணம் பனுவல் என்று பொதுப்படக் கூறியுள்ளார். ஒன்றிற்கொன்று முரண்படும் சமயநூல்கள் கூட இவ்விஷயத்தில் ஒருமுக மான முடிவுடையவை என்பது புலப்படு கின்றது. அறநெறி ஒழுகப் பாவம் தொலை யும். பாவம் தொலைய, அன்பு வளரும்; அன்பு வளர, பகைமை நீங்கும்; பகைமை அகல, போர் ஒழியும்; அமைதி நிலவும்; அமைதி நிலவ ஆன்மஞானம் மலரும்; ஆன்ம ஞானம் வீட்டின்ப வேட்கையை நல்கும். வீட்டின்ப வேட்கை உண்டாக யான் எனது என்னும் அகங்கார மமகாரச் செருக்குகள்

மடியும். அங்ஙனம் இருவினையினின்றும் நீங்கி மெய்யறிவு பெற்றவர்களே நீத்தார்! அவர் பெருமை சொல்லில் அடங்கா! அவரைப் பற்றிப் பழமொழி நானூறில் ஒரு செய்யுள் கூறுவதைப் பார்க்கலாம்

''மனத்தினும், வாயினும் மெய்யினும், செய்கை
அனைத்தினும் ஆன்று அவிந்தார் ஆகி- நினைத்திருந்து
ஒன்றும் பரியலராய் ஒம்புவார் இல் எனில்
சென்று படுமாம் உயிர்''.

''உள்ளத்தாலும், உரையாலும், உடம்பாலும் எல்லாச் செய்கைகளாலும் மாண்பு நிறைந்து அடங்கியவர் ஆகி ஏதொன்றிலும் பற்றுக் கொள்ளாதவராய் ஒழுக்கம் பேணுவார் அதாவது நீத்தார்-இல்லாரெனில் உயிர்களெல்லாம் அழிந்துபோகும்.'' என்று கூறுகிறது பழமொழி வெண்பா! நீத்தார் உளதாலே தான் உலகில் உயிர் அழிந்தொழியாது விளங்குகிறதாம். ''என்னே மெய்த்துறவு கொண்டார் சிறப்பு!'' என்று வியந்து மகிழ்கிறோ மன்றோ? வாழ்க நீத்தார் பெருமை என வாழ்த்தி அவர்க்கு வணக்கம் செலுத்தி உய்வோமாக!

வள்ளுவப் பேராசான் வகுத்தளித்த அற நூலாம் திருக்குறளில் மூன்றாவது அதிகாரமான நீத்தார் பெருமையில் இரண்டாவது குறட்பாவை நாம் சிறிது பார்த்துப் பயன் பெறுவோம்.

''துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக் கொண்டற்று!''

என்பதுவே அக்குறட்பா.

ராஜச, தாமச, சாத்விகம் என்னும் முக்குணங்களையும், காமம், வெகுளி, மயக்கம் என்னும் குணவிகாரங்களையும், வெப்பம்—குளிர், இன்ப—துன்பம், மானம்-அவமானம் என்றெல்லாம் கூறப்படுகிற அனைத்தையும் கடந்தவர்களாய் அகப்பற்றும் புறப்பற்றும் அற்ற, மெய்யறிவாளர்களின் சிறப்புக்கு அளவு கூறிக் கணிக்கலுற்றால் இதுவரை இவ்வுலகில் பிறந்து இறந்தவர்கள் தொகையைக் கணக்கிட்டு அறிய முயல்வதையே ஒக்கும், அதாவது அளவில் அடங்காது என்பதாகும்.

ஆம்; துறந்தார்-அதாவது நீத்தார் கீர்த்தியை அளந்து அளந்து பார்க்கினும் அஃது அளவில் அடங்கா. துறந்தாரை எப்படியாவது விளக்கிக் காட்டி அவர் பெருமையை உள்ளபடி உணர்த்திவிட முயன்றால் தோல்விதான் கிட்டும் பலன்-அப்படி முயன்று வெற்றி பெறாத மானிட உள்ளம், அங்ஙனம் நீத்தாரைக் கடவுள் என்றே கூறி அமைதி பெறுகிறது. கடவுளை - கடவுளின் தன்மையை, பெருமையை எவ்வளவு தான் எடுத்துரைப்பினும் முற்றக் கூறியதாகி விடுமா? முடியாதன்றோ? எனவே நீத்தாரைக் கடவுளுடன் சேர்த்துவிட்டால், கடவுள் மனம், வாக்கு, காயங்கட்கு எட்டாத முழுமுதற்பரம் பொருள் என்று கூறிவிட்டால், நீத்தார் பெருமையை உணர்த்தி விட்ட ஒரு திருப்தி ஏற்பட்டு விடுகிறது. அந்த நிலையை குண்டலகேசி ஆசிரியர் பெற்றதை நாம் பார்க்கலாம்.

''முன்தான் பெருமைக்கண் நின்றான்; முடிவு எய்துகாறும்
நன்றே நினைந்தான்; குணமே மொழிந் தான்; தனக்கு என்று
ஒன்றானும் உள்ளான்; பிறர்க்கே உறுதிக்கு உழன்றான்
அன்றே இறைவன்; அவன்தாள் சரண் நாங்கள் அன்றே''

இது புத்தர் பிரானை வணங்கிக் கூறுகிற செய்யுள். வரலாறு கண்ட துறவிகளிலே சிறந்த துறவி புத்தர் பெருமான் அல்லவா? அவர் பெருமையை அளவிட்டுரைக்க முடியாத நிலையில் அவரைக் கடவுளாகக்காட்டி அமைதி பெறுகிறது. பெருமைகளை அடுக்கிக் கொண்டே போனால் புத்தபிரான் எல்லார்க்கும் முதற்கண் முன்வந்து நின்றான்; இறுதி

வரை நல்லனவற்றையே எண்ணினான்; நன்மை தருவனவற்றையே கூறினான்; தன் நன்மைக்காக எ தை யு ம் விரும்பவில்லை; மற்றவர்களின் கதிமோட்சத்திற்காகவே பாடு பட்டான். அவனல்லவா கடவுள்? அவன் திருவடிகளே எங்கட்கு அடைக்கலமாகும். என்றெல்லாம் குண்டலகேசி கூறுவதிலிருந்து நீத்தார் பெருமை பற்றி அறியலாம்.

சொற்செட்டும், தெளிவும் மிக்கவள்ளுவம் ஒரு சிறு உதாரணம் மூலம் துறந்தார் பெருமையை எவ்வளவு கச்சிதமாக, விளக்க மாக எடுத்துக் கூறிவிடுகிறது பார்த்தீர்களா?

''துறந்தார் பெருமை துணைக்கூறின், வையத்து, இறந்தாரை எண்ணிக்கொண் டற்று''

என்ன அருமை! என்ன அருமை! ''இது வரை உலகில் இறந்தவர்கள் தொகை எவ்வளவு என்று எண்ணிக் கணக்கிட்டுரைக்க முடியுமானால் துறவிகளின் பெருமையையும் அளவிட்டுக் கூறிவிடலாம்'' என்று கூறு வதன் மூலம் துறவிகளின் பெருமையை அளவிடமுடியாது என்பதை எவ்வளவு திட்ட வட்டமாக உணர்த்திவிடுகிறார் பார்த்தீர் களா? இல்லாவிட்டால்

''கடுகைத் துளைத்து ஏழ் கடலைப் புகுத்திக்
குறுகத் தறித்த குறள்'' என்று இடைக் காடரும்.
அணுவைத் து ளை த் து ஏழ்கடலைப் புகுத்திக்
குறுகத் தறித்த குறள்'' என்று

அவ்வைப் பாட்டியும் பாராட்டிப் புகழ்ந்து மகிழ்வார்களா, என்ன?

"குடம்பை தனித்து ஒழிய, புள்
பறந்தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு",

என்பது வள்ளுவன் வடித்த அருமைக் குறட் பாக்களுள் ஒன்று. இப்பாவுக்கு உரை வகுத்த மணக்குடவர்,

"கூடு தனியே கிடக்கப் புள்ளுப் பறந்து போனாற்போலும், உடம்போடு உயிர்க்கு உள்ள நட்பு என்றவாறு"

என்று எழுதினார். காலிங்கரும் இவ்வுரையை ஏற்று அங்ஙனமே. ஆனால் சற்று விரிவாக

"இவ்வுலகத்து, குருவி முதலிய பறவை யானது தான் வாழும் கூடு தன்னையின்றித் தனித்து ஆங்கு ஒழியப் பறந்து போகிய அத் தன்மைத்தே; மற்று யாதோ எனின் உடம்போடு உயிரின்கண் உளதாகிய உறவுபாடு என்றவாறு"

என்றதுடன் அமையாது,

"குடம்பை என்பது புள் இயற்றும் கூடு என்றது" என்று குடம்பை என்னும் சொல்லிற்குப் பொருள் இன்னது என்றும் தெளிவுறுத்திப் போந்தார்.

ஆனால், பரிமேலழகர் வடித்துக் காட்டும் பெற்றியால், அவருரை அறிஞருலகில் எல்லையிலா ஏற்றத்தைப் பெற்றுப் பிறங்கு கிறது. அவர் தரும் அரிய உரையைப் பார்ப்போம் :

"முன் தனியாத முட்டை தனித்துக் கிடப்ப அதனுள் இருந்த புள்ளுப் பருவம் வந்துழிப் பறந்துபோன தன்மைத்து, உடம்பிற்கும் உயிர்க்கும் உளதாய நட்பு என்றவாறு"

என்று, எழுதியதுடன் அமையாது முன்னவர்க்குத் தாம் மாறுபட்டு வேறுரை கூறுவதற்கு ஆக்கம் தரும் முறையில் மேலும் விளக்கம் தருகிறார். அதையும் பார்ப்போம்.

"'தனித்து ஒழிய' என்றதனான், முன் தனியாமை பெற்றாம்; அஃதாவது, கருவும் தானும் ஒன்றாய்ப் பிறந்து வேறாம் துணையும் அதற்கு ஆதாரமாய் நிற்றல்; அதனால், அஃது உடம்பிற்கு உவமை ஆயிற்று. அதனுள் வேற்றுமை இன்றி நின்றே பின் புகாமற் போதலின், புள் உயிர்க்கு உவமை யாயிற்று. முட்டையுட் பிறப்பன பிறவும் உளவேனும் புள்ளையே கூறினார், பறந்து போதல் தொழிலான் உயிரோடு ஒப்புமை எய்துவது அதுவே ஆகலின்.

என்று விளக்கவுரை தரும்பொழுது 'நட்பு' என்னும் சொல் இடையூறாய் ஆகாமல் செய்யும் பரிமேலழகர் தம் நுண்மாண் நுழை புலம் பெரிதும் பாராட்டற்குரியது.

"'நட்பு' என்பது, ஈண்டுக் குறிப்பு மொழியாய், நட்பின்றிப் போதல் உணர்த்தி நின்றது" என்று உரை வகுத்து அதற்கு ஆக்கம் ஊட்ட எண்ணி,

"சேதனமாய், அருவாய், நித்தம் ஆய உயிரும், அசேதனமாய், உருவாய், அநித்தம் ஆய உடம்பும் தம்முள் மாறாகலின், வினை வயத்தால் கூடியது அல்லது நட்பு இல என்பது அறிக!" என்று தம் கொள்கையை

மிக அருமையாகச் செம்மையாக நிலை நாட்டிவிட்டோம் என்ற பெருமிதத்துடன் முன்னவர் உரையை மறுத்தொதுக்குகிறார். இறுதியில், அதையும் பார்ப்போம்.

''இனி, 'குடம்பை' என்பதற்குக் கூடு என்று உரைப்பாரும் உளர். அது புள்ளு டன் தோன்றாமையானும், அதன் கண் அது மீண்டு புகுதல் உடைமையானும் உடம்பிற்கு உவமை ஆகாமை அறிக!'' என்று அழுத்தமாகக் கூறி அப்பாவின் உரையை முடிக்கின்றார்.

பரிமேலழகரின் பேரறிவும், பெருந்திறமை யும் உரை கூறும் நயமும் எவரையும் ஆட் கொள்ளத் தக்கவை. சிற் சில இடங்களில் அவருரை பொருந்தாதிருக்கின்றது என்று கருதுவோமானால் அது அவரை அவமதித்த தாகாது. அவர் பால் கொண்ட பெரு மதிப்பு இதனால் சிறிதும் குறையாது. ஆனைக்கும் அடி சருக்கலாம் தானே?

மீண்டும் ஒருமுறை அக்குறட்பாவை நன்கு நின்று நோக்கி, பார்க்கலாம்

குடம்பை தனித்து ஒழிய
புள் பறந்தற்றே, உடம்போடு
உயிரிடை நட்பு

தேடுவார் அற்றுக் 'குடம்பை' வறிதே கிடக்க அதை விட்டுப் பிரிந்து, பறவை வேறெங் கோ பறந்தோடிப் போனாற் போன்றது ஆகும், உடம்புக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு. இக்கருத்தையே குறட்பா உணர்த்துகிறது. 'குடம்பை' என்ற சொல்லை வள்ளுவன் எப்பொருளில் ஆளுகிறான் என்பதே தெளியப்பட வேண்டிய ஒன்று.

பரிமேலழகர் மிக்க வாதத் திறமையுடன், எழுதிய உரை பல்லோரது உள்ளங்களை யும் கவர்ந்துள்ளது உண்மையே. ஆனால் அக்குறட்பாவில் பயின்றுள்ள சொற்களையும் அவற்றிற்கு அக்காலத்தில் வழங்கிய பொரு ளையும் நாம் கருத்திற் கொண்டே உரை காண முயலவேண்டும். அன்றேல் இடர்ப் பாடுதான் விளையும் இல்லையா? முதலில் 'குடம்பை' என்ற சொல்லை ஆய்வோம். சங்க காலத்தில் பறவைக்கூடு என்ற பொருளி லேயே அச்சொல் பயிலப்பட்டு வந்திருக் கிறது. முட்டை என்ற பொருளில் சங்கப் பாடல்களில் எங்கும் பயின்றுள்ளதாய்க் காண முடியவில்லை. 'கல்லாடம்' போன்ற நூல்களும் பறவைக்கூடு என்ற பொருளி லேயே அச்சொல்லை ஆளுகிறது.

நிகண்டுகளில் பழமையானதாகக் கருதப் படும் திவாகரம்

''குடம்பை, பஞ்சரம், கட்சி, கூடு ஆகும்'' என்று ஒரு பொருளை சுட்டி நிற் கிறது. அண்டம், சினை என்னும் பெயரையே முட்டைக்கு வழங்குகிறது.

பிங்கலந்தைதான்

''குடம்பை முட்டையும் கூடும் ஆகும்'' என்று இருபொருள் தந்து நிற்கிறது. ஆனால் அகராதி நிகண்டோ

''குடம்பை என்பது முட்டையும், ஏரியும் கூடும் எனவே கூறும் முப் பெயரே'' என, முப்பொருள் தந்து முற்றுகிறது. இவற்றை யெல்லாம் மனத்துட்கொண்டு வள்ளுவர் காலத்தையும் மறக்காமல் பொருள் காண முயன்றால் குடம்பை என்ற சொல் கூட்டையே உணர்த்தி நிற்கிறது என்ற முடிவுக்கு வரலாம். ஆனால் பரிமேலழகர் நிலைநாட்டிய உரையைப் பொருந்தாதெனத் தக்க சான்றுகளுடன் காட்டினாலன்றோ 'கூடு' என்ற பொருள் கொள்ளல் கூடும்? ஆம்; மேலே ஆய்வோம்.

வள்ளுவர் தொண்டைமண்டலத்தில் இயற்கையோடு இணைந்து வாழ்ந்து புள்ளியல், விலங்கியல் முதலான உயிரியல்களை எல்லாம் தெள்ளத் தெளியக் கண்டறிந்தவர். நம்மைப்போல வேடந்தாங்கல் போன்ற இடங்கட்கு வேடிக்கையாகச் சென்று வன விருந்து அருந்திவிட்டுப் பறவைகள் பறப்பதையும் கண்டுவிட்டு வருபவரல்லர்; வந்தவரல்லர். நாளெல்லாம், பொழுதெல்லாம் நாடிக் காத்திருந்து தேடியலைந்து புள்ளினங்களின் வாழ்க்கை முறையைப் பொருந்தக் கண்டு, நோக்கிப் பார்த்துப் புலமை சான்றவர்.

பல்லாயிரம் மைல்கட்கு அப்பாலிருந்து எத்தனை எத்தனையோ பறவைகள் வருகின்றன. வந்து தத்தமக்கு என்று அருமையான கூடுகளை - ஆம், குடம்பைகளை - அமைத்துக் கொள்ளுகின்றன. குறித்த பருவக்காலம் முழுவதும் அதிலேயே வசிக்கின்றன. காலம் முடிந்ததும் அக்கூட்டை அங்கேயே, வறிதே கிடக்க, விட்டுவிட்டு எங்கிருந்து வந்ததோ அங்கு பறந்தோடிச் சென்று விடுகின்றன. மீண்டும் அக்குடம்பையில் அப்பறவையோ பிறிதொரு பறவையோ குடியேறுவதில்லை. இவ்வியல்பை நாம் இன்றும் வேடந்தாங்கல் போன்ற இடங்களில் காணலாம்.

அன்றியும் முட்டையிலிருந்து வெளிப்படும் இளம் பறவையைப் பார்ப்பு, பிள்ளை, குஞ்சு என்று கூறுவதே தொன்று தொட்டு வரும் மரபு. தொல்காப்பியத்தில் மாற்றரும் சிறப்பின் மரபியலில்,

''பார்ப்பும், பிள்ளையும் பறப்பவற்று இளமை'' என மொழியப்படுவது மனக் கொள்ளத் தக்கது.

''பிள்ளையும் பார்ப்பும் குஞ்சின் பெயரே'' என்றும் பிங்கலந்தைச் சூத்திரத்தால் 'குஞ்சு' என வழங்கும் மரபும் புலப்படுகிறது.

இவற்றை நோக்கினால் வள்ளுவர் மரபு கெட புள் - பறவை எனக் கூறினார் என்று கொள்ள வேண்டும். மரபு நெறி பிறழார் வள்ளுவர். முட்டை என்ற கருத்தில் 'குடம்பை'யை ஆண்டிருந்தால் ''பார்ப்பகன் றற்றே'' என்றோ அன்றிப் ''பிள்ளை நீத் தற்றே'' என்றோ அல்லது குஞ்சேகி யற்றே'' என்றோவன்றோ கூறியிருத்தல் வேண்டும், இல்லையா?

மேலும் வெளிப்பட்ட குஞ்சுகள் உடனேயே பறக்கும் ஆற்றல் பெறுவதில்லை. ஒரு குறிப்பிட்ட கால எல்லை கடந்த பின்னரேயே பறக்கும் வல்லமையை அடையும். அதுவரை அந்த முட்டை ஓடுகள் கூடுகளில் கிடப்பதில்லை. கூடிய விரைவில் அவ்வோடுகளைத் தாய்ப்புள்ளோ அல்லது தந்தைப்புள்ளோ அலகால் கொத்தி எடுத்து அப்புறப்படுத்திவிடும். அங்ஙனம் செய்வதன் மூலம் குஞ்சுகள் தங்கிக் கிடக்கும் இடத்தை மெத்தெனச் செய்து விடுகின்றன. இதையும் கருத்தில் கொண்டு பார்த்தால் ''முட்டை தனித்துக் கிடப்ப'' என்னும் பொருள் சிறிதும் பொருந்தாமை புலப்படும்.

குடம்பை என்னும் சொல்லுக்கு முட்டை எனப் பொருள் கிட்டினும் முட்டை ஓட்டை அச்சொல் குறிக்கமாட்டாது. பார்ப்பு வெளிப்பட்டபின் எஞ்சி நிற்பது முட்டை ஓடேயன்றி முட்டையல்ல அன்றோ? மெய்ம்மை இங்ஙனமாக, இல்லாத முட்டையைக் கிடப்பதாகக் கருதல் எங்ஙனம் பொருந்தும்?

இவற்றையெல்லாம் மனத்துட்கொண்டு விருப்பு வெறுப்பற்ற நிலையில் நின்று தெளிவாகச் சிந்திக்க முயல்வோமானால் பரிமேலழகர் உரையினும் முன்னவர் உரையே செவ்விது என்பது தெள்ளிதாம்.

உடம்போடு ஒட்டி வாழ்ந்த உயிர் அது நாள் வரை எதை ஆதாரமாய்ப் பற்றி நின்றதோ அதை, அந்த உடலை மண்ணிற் கிடத்திவிட்டு எங்கோ சென்று

விடுகின்றது. பறவை அகன்று சென்ற பொழுது சிதையாமல் இருந்த கூட்டைப் போலவே உடம்பும் சிதையாமல் கிடக்கின்றது. உயிர் சென்ற அப்பொழுது பார்ப்பு வெளிப்பட்ட முட்டையைப் போல சிதறி விடுவதுமில்லை.

பரகாயப் பிரவேசம் என்னும் கூடு விட்டுக்கூடு பாய்தல் கலையை நம்பினால் திருமூலர் கதையை நம்பினால் உடம்பாகிய கூட்டிற்குள் உயிராகிய பறவை மீண்டும் செல்வது சாத்தியம் என்றல் நியாயமே!

இந்த வேளையில் ஔவையார் ''பாடு பட்டுத் தேடி'' என்னும் தொடக்கத்தை உடைய வெண்பாவில் ''கூடுவிட்டு இங்கு, தான் போயினபின்பு'' என்று கூறும் சொற்றொடர் கருதத் தக்கதாம்,

# ஆறு சமயங்கள்

கண் கண்ட கடவுளாய், கருணை முகிலாய், கலைக் கடலாய், முழுநிலை அறிவுச் சுடராய், பெருந்தவக் களஞ்சியமாய், சீலத்தின் தனிமலையாய், அறத்தின் மூர்த்தியாய் இன்று இலங்கியருளுபவர்கள் காஞ்சி காமகோடிப் பீடாதிபதிகளாவார்கள். அக்கடவுள் மாமுனிவரர் ஒருநாள், திருத்தணியில் எழுந்தருளியுள்ள போது, ஒன்றுக்கும் பற்றா ஏழையேனை அருளுடன் கடைக்கணித்து, 'அறு சமயம்' பற்றி வரலாற்று அடிப்படையில் ஓர் ஆய்வுரை எழுது! எனப் பணித்தருளினார்கள். சிற்றறிவும், சிறு தொழிலும் உடையனேன் என் குறையை நன்கறிவேன். எனினும், ஆணையைக் கடக்க அஞ்சி, ஆண்டவன் அடிமலரையும் காஞ்சிப் பெருமான் அருளையுமே துணையாயும் புணையாயும் பற்றி இப்பணி தலை மேற் கொண்டேன்.

திருநெறியாம் தெய்வப் பெருநெறியில் செங்கோல் ஓச்சிய அறச்செல்வர்கள், வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவர்கள், திருவாய் மலர்ந்தருளிய தெய்வப் பாசுரங்கள், நூற்பாக்கள், சமய வகைகளைப் பற்றியும் சில பல இடங்களில் சுட்டி நிற்கின்றன. அவற்றை எல்லாம் தொகுத்து, நூலறிவும் நுண்ணறிவும் துணை புரிய, வகுத்துக் காட்டி விளங்கச் செய்தனர் சமயக் கணக்கர் பலர். பல்வேறு நூல்களை ஆக்கிய நுண்மாண் நுழை புல மிக்காரும் சில - பல சமயவரம்புகளை பரிந்தளித்துள்ளனர். அவ்வவற்றிற்கு உரை செய்த நல்லாசிரியர்கள் பலர் அவற்றை எல்லாம் ஆய்ந்து துலக்கிக் காட்டியருளுகின்றனர். அவர்கள் ஆக்கிய உரை நுணுக்கத்தால் பெறும் பயன் அளப்பரிது.

அவர்க்கெல்லாம் கரங்கூப்பி, முடி தாழ்த்தி, நெஞ்சார வணக்கம் செய்து பணி மேற் செல்லுகிறேன். குற்றம், குறை, வழு, பிழைகள் ஆகியவற்றைப் பொறுத்துக் குணமுணர்த்த வேண்டுமென்று கற்றறிந்த பெரியோர்களை எல்லாம் மிக்க பணிவுடன் வேண்டிக் கொள்ளுகிறேன்.

தேவாரம், திருவாசகம், திருமந்திரம் முதலான திருமுறைகளிலும், மணிமேகலை, பெருங்கதை முதலான இலக்கியங்களிலும், சிவஞான சித்தியார், ஞானாவரணம் முதலான சாத்திர நூல்களிலும், திவாகரம் பிங்கலந்தை முதலான நிகண்டுகளிலும் யாழ்ப்பாணம், சென்னைப் பல்கலைக் கழக அகராதிகளிலும் சமயம் பற்றிப் பேசப்படுகின்றன. காலத்திற்கும், இடத்திற்கும், உரைப்போர் கருத்துக்கும், ஏற்ப வேறுபாடுகள் மட்டுமின்றி மாறுபாடுகளும் காணப்படுகின்றன. ஆறுவகைப் படுத்திய சமயக் கணக்கை[1] ஐவகையாகவும் மணிமேகலை வகைப்படுத்துகிறது. பெருங்கதையிலும் ஐவகையாகக் கணிக்கப்பட்டிருக்கக் காண்கிறோம். பின்னே திருமூலர் ''ஆறு சமயங்கள் என்பன நூறு சமயங்களுள் அடங்கியவை'' என்று,[2] கொள்கைப் பிரிவால் பெருகி நின்ற எண்ணற்ற சமயங்கள் உள்ளமையை உணர்த்துகிறார். மணிவாசகப் பெருமானோ, ''அறுவகைச் சமயத்து அறுவகையோர்'' என்று ஆறுபெரும் பிரிவுள் அடங்குவதாக வகைப்படுத்தியுள்ள அளவற்ற சமய நெறியோர் எனப் புலப்படுத்துகிறார். கவிச்சக்கரவர்த்தி கம்பனோ ''பல் பெரும் சமயம்'' என்று ஏராளமான சமயங்களுள் அடங்கிய பெரிய சமயங்கள் பல எனத் தெளியவைப்பான்.

'சமயம்', என்றால் வழி என்பதே பொருள். எதையும் அடைய வழி யுண்டு. அது ஒன்றாய், சிலவாய், பலவாய் இருக்கலாம். அங்ஙனமே தலைவனை - இறைவனை அடையவும் வழி கோலினர் முன்னை அறவோர். அவ்வழியை ஆக்கியவர் யாரெனக் காணவும், காட்டவும் ஊகிக்க வும் கூட ஏதுக்கள் இன்றில்லை. காலம் கணிக்கக் கூடுவன எவையும் ஆதி காலம் கணிக்க ஒண்ணாத வற்றை அநாதி என்பது நம்முடை மரபு. ஆண்டவனைப் போலவே நமது வேதமும் அநாதி. அந்த மறை நெறியாம் வைதிக மார்க்கமும், அதாவது சநாதன தர்மமும், அநாதியாம்.

எழுத்தே தோன்றுவதற்கு முன், மொழி ஒலி யுருவிலேயே இயங்கிய காலத்தில் தோன்றியது வேதம். ஆகவே தான் தமிழ் நூலோர் வேதத்தை 'எழுதாக் கிளவி' (எழுத்துருவம் கொள்ளாது ஒலி யுருவில் விளங்குவது) என இயம்பினர். கல்வியில் பெரியனான கம்பன் தானும் ''தமரமதுடன் வளர் சதுமறை'' என்று அருமை புலப்பட உரைப்பது மனங்கொள்ளத் தக்கது.

அந்த ஒப்பற்ற - உயர்வினில் உயர்வற உயர்நலம் உடைய மறை தந்த நெறியாம் நமது சமயமும் அநாதி எனக் கணிப்பர் முற்றறிவினர். ''உலகம் பலவிதம்'' ஆதலின்

கால நீட்சிக்கேற்பப் பெருக்கெடுக்கும் கருத்து வளர்ச்சி காரணமாயும், இடம், சூழ் நிலை, மனப்பக்குவ நிலை காரணமாயும், அறவோர்கள் உள்ளும் புறத்தும் கண்ட உண்மை அனுபவம் காரணமாயும் சமயங்கள் பற்பலவாய்த் தோன்றி வளர்ந்து உட்பிரிவு கள் கிளைத்துக் கொள்கை வேறுபாடுகளும் முறை மாறு பாடுகளும் கொண்டு எண்ணில வாய் பல்கி நிற்கின்றன. மிகப் பிற்பட்ட வரலாற்றுக் காலத்தில் தோன்றிய கிறிஸ்த வம், இஸ்லாமியம் ஆகியவை கூட பல கிளைகளாய் பிரிந்து இயங்குவதைக் காண் கிறோம். இந்த உதாரணத்தின் வாயி லாகவே, வைதிக சமயமும் மூலத்து ஒன்றாய் முளைத்து, மூன்று கவடாய்ப் பிரிந்து பற்பல கிளைகளாய்க் கிளைத்து, இன்று, காட்சி தருவதை நாம் எளிதில் புரிந்து கொள்ள லாம். இனி சமய வகை - தொகைகளைக் காண்போம்.

மணிமேகலையில், சமயக் கணக்கர் திறம் கேட்ட காதையில்,

''பாங்குறும் உலோகாயதமே,
பௌத்தம்,
சாங்கியம், நையாயிகம், வைசேடிகம்,
மீமாம்சகம் ஆம்; சமய ஆசிரியர் -
தாம் பிருகற்பதி, சினனே, கபிலன்,
அக்கபாதன், கணாதன், சைமினி;
மெய்ப்பிரத்தியம், அநுமானம், சாத்தம்,
உவமானம், அருத்தாபத்தியம், அபாவம்
இவையே இப்போது இயன்று உள
அளவைகள்''.
(27-78-85)

மேலே கூறிய ஆறு சமயங்களையும் வெளிப்படுத்திய ஆசிரியன்மார் முறையே, பிருகஸ்பதி, சினன் (புத்தன்), கபிலன், அஷபாதன் (கௌதமன்), கணாதன், சைமினி ஆகிய அறுவர் ஆவர்.

அவ்வச் சமயங்கட்கும் வரையறுக்கப்பட்டு இன்று வழக்கில் உள்ள அளவைகள் (பிரமாணங்கள்) வருமாறு:-

உலோகாயதத்திற்குப் பிரத்யக்ஷமே அளவை; பௌத்தத்திற்குப் பிரத்யக்ஷத்துடன் அநுமானமும் அளவைகள்; சாங்கியத்திற்குப் பிரத்யக்ஷம், அநுமானம் இரண்டினோடு ஆகமமும் அளவைகள்; நையாயிகத்திற்குப் பிரத்யக்ஷம், அநுமானம் ஆகமங்களோடு உபமானமும் அளவைகள்; வைசேடிகத்திற்குப் பிரத்யக்ஷம், அநுமானம், ஆகமம், உபமானம் ஆகிய நான்கினோடு அருத்தாபத்தியும் அளவைகள், மீமாம்சகத்திற்குப் பிரத்யக்ஷம், அநுமானம், ஆகமம், உபமானம், அருத்தா பத்தியோடு அபாவம் கூடி ஆறு அளவைகள்.

பிரத்யக்ஷம் = கண்டு அறியும் மெய்யறிவு.

அநுமானம் = அறிவால் சிந்தித்து முடிவு செய்தல்.

ஆகமம் = ஆன்றோர் உரை வழி உணரப்படும் கருத்துக்கள்.

உபமானம் = ஒன்றோடு ஒன்றை ஒப்பிட்டு உணர்வது

அருத்தா பத்தி = ஒன்றைக் கொண்டு அதனோடு இயைபுள்ள, அல்லது எதிர்மாறுன அல்லது அதற்கு மூல மான ஒன்றை உணர்தல்.

அ பாவம் : = ஒன்றின் இன்மை பற்றி உரைத்தல்.

அளவை ஒரு காலத்தில் வேத வியாசன் கணித்த வண்ணம் பத்தாக இருந்தது.

கிருதகோடி என்னும் போதாயனர் கணித்தவாறு அளவை எட்டாகச் செறிவுற்றது.

சைமினி கணித்தபடி அளவை ஆறு; இந்த ஆறு தான் மேலே கண்டவை.

சம்பவம் = உண்டாகும் தன்மை அல்லது நெறி.

ஐதிகம் = வழிவழியாக வந்து நிலைத்து விட்ட சொற்பொருள் அல்லது உலகியல் மரபு.

இந்த இரண்டும் சேர்ந்த எட்டளவைகள் தாம் போதாயனர் நெறி.

இவற்றோடு சுபாவம் (இயல்பு) பாரிசேஷம் (கழிந்தவைபோக எஞ்சியது காண்பது) இரண்டும் சேர்ந்த பத்தளவைகள்தாம் வேத வியாச நெறி.

இனி 'மணிமேகலை' மற்றொரு அறு வகைச் சமயத்தையும் குறிக்கக் காண்கிறோம். 1. சைவநெறி, 2. பிரமநெறி, 3. வைணவ நெறி, 4. வேதநெறி, 5. ஆசிவக - நிர்க்கந்தம் என்னும் உட்பிரிவையுடைய அருக நெறி, 6. பூதநெறி என அவை குறிக்கப்படுகின்றன.

இங்ஙனம் ஆறு - ஆறு வகையாய்ப் புலப் படுத்திய சாத்தனார் சமயக் கணக்கர் திறம் கேட்ட காதை'யில் அளவை வாதி, சைவ வாதி, பிரம வாதி, வைணவ வாதி, வேத வாதி, ஆசிவக வாதி. நிகண்ட வாதி, சாங்கிய வாதி, வைசேடிக வாதி, பூதவாதி ஆகிய பத்துச் சமயக் கணக்கர்களிடம் சென்று சமய உண்மை கேட்ட மணிமேகலையை ''ஐவகைச் சமயமும் அறிந்தனள் ஆங்கு'' என்று கூறி முடிக்கிறார். ஆனால் இவற்றுள் பௌத்தம் அடங்க வில்லை. எனவே பௌத்த மல்லாத ஐவகைச் சமயம் எனக் கொள்வது தான் சரியாகும். அங்ஙனமாயின் அளவை வாதி முதல் வேத வாதி வரை ஐவரும் வேத நெறி போற்றும் வைதிகர்கள். ஆகவே அந்த ஐந்தும் ஒருவகையில் அடங்கும். ஆசிவக வாதியும், நிகண்ட வாதியும் அருக நெறி போற்றும் ஆருகதர்களே. ஆக மேற்கண்ட வைதிகம், ஆருகதம், சாங்கியம், வைசேடிகம், பூதவாதம் ஆகிய ஐந்தையும் ஐவகையாகக் குறிக்கிறார் என்னலாம். இங்கும் பௌத்தத்தைச் சேர்த்தால் வகை ஆறாக ஆவதை காண் கிறோம்.

இனி நிகண்டு - அகராதி வகைகளைக் காணலாம். தமிழ் நிகண்டுகளில் காலத் தால் முந்தியது (?) என்று பலரால் கருதப் படும் 'திவாகரம்',

''அறுசமயம் :- வைசேடிகம்,
நையாயிகம்,
மறு இல் மீமாம்சை, ஆருகதம்
பௌத்தம்
பிரதிலோ காயிதம் என்றும் பெற்றிய''

என, வைசேடிகம், நையாயிகம், மீமாம்சகம், சமணம், பௌத்தம், லோகாயதம் என்னும் ஆறையே உணர்த்தி நிற்கிறது. வைதிக சமயத்தைக் கடைப்பிடித் தொழுகியவரும் கணபதி வணக்கம் கூறி நூலைத் தொடங்கிய வருமான திவாகர முனிவர் (காலம் கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முந்திய தன்று) ஏனோ சைவம் வைணவம் முதலியவற்றைக் கூறாது சென்றார் என்பது புலப்படவில்லை. சூடாமணி நிகண்டு செய்த மண்டல புருடர் தமக்கு முன் இருந்த திவாகர முனிவரையும், பிங்கல முனிவரையும், மட்டுமே நிகண்டு செய்தவராகக் குறிப்பிடுவதாலும், சிலம்பு, சிந்தாமணி உரையாசிரியர்கள் திவாகரச் சூத்திரங்களையே மேற்கோளாகக் காட்டு வதாலும் நிகண்டு வரிசையில் இதுவே முன்னையது எனக்கொள்வர்.

பிங்கலந்தை என வழங்குவதும், பிங்கல முனிவரால் செய்யப்பட்டதுமான பிங்கல நிகண்டு,

''உலகாயதம், புத்தம், சமணம், மீமாம்சை,
பாஞ்ச ராத்திரம், பாட்டா சாரியம்,
இவ்வகை ஆறும் புறச்சமயம் ஆகும்''

என, லோகாயதம், பௌத்தம், சமணம், உத்தர மீமாம்சை, பாஞ்சராத்திரம் (வைணவம்), பாட்டாசாரியம் (பூர்வ மீமாம்சை) ஆகிய ஆறும் புறச்சமய வகை ஆகும் என்றும்,

''வைரவம், வாமம், காளாமுகம், மா
விரதம், பாசுபதம், சைவம் என்று உட்
சமயம் ஆறே''.

என, வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் ஆகிய ஆறும் அகச் சமய வகை ஆகும் என்றும் வகுத்துரைப்பதைக் காணலாம். மேலே கூறிய திவாகர முனிவர் மைந்தர் என இவரைப் பலரும் கூறுவர்.

''திவாகரன் பயந்த பிங்கல முனிவன்'' என, சிறப்புப் பாயிரத்தில் தம்மைக் குறிக்கும் போது 'பிங்கல முனிவன்' எனக் கூறுவதை ஆழ்ந்து நோக்கினால் ''திவாகர முனிவரால் அறமுட்டிய பிங்கல முனிவன்'', அதாவது, ''திவாகர முனிவரின் மாணாக்கராகிய பிங்கல முனிவன்'' எனக் கொள்ளலே சிறப்புடைய தாகும். இனி மண்டல புருடர் ஆக்கிய சூடாமணி நிகண்டு,

''அரியஉட்சமயம் ஆறே, ஆவன; சைவம், தூய்மை
பெருகு பாசுபதத்தோடு, பிறங்கும் மா விரதம், மற்றும்
கருதிய வீடு பேறு காட்டு காளாமுகம் தான்,
மருவிய வாமம், மிக்க வைரவம் என்னலாமே!''

(12-58)

என்று, சைவம், பாசுபதம், மாவிரதம் காளாமுகம், வாமம், வைரவம் ஆகிய ஆறும் அகச் சமயங்கள் என்பதாகக் கூறும்.

அடுத்து

''அறு புறச்சமயந் தானே அறைவு உலோகாயதம், பின்
உறைதரு பௌத்தமே, ஆருகதம், மீமாஞ்சமோடு,
குறிபெறு மாயாவாதம், கூறிய பாஞ்ச ராத்ரம்
நெறி பெறும் இவையே என்ன நிகழ்த்துவர் நூல் வல்லோர்கள்

என்று, உலோகாயதம், பௌத்தம், சமணம், மீமாம்சை, மாயாவாதம், பாஞ்சராத்திரம் ஆகிய ஆறும் புறச்சமயங்கள் என்பதாகக் கூறும். பிங்கலந்தையிலிருந்து சூடாமணியில் காணும் வேறுபாடு உத்தர, பூர்வ மீமாம்சங்கள் இரண்டையும் மீமாம்சை என ஒன்றாக்கி மாயாவாதத்தைக் கூட்டி ஆறுவகை ஆக்கியிருப்பதாகும். ஏகான்ம வாதத்தில் உள்ள பிரிவுகளான மாயாவாதம், பாஸ்கரீய வாதம் கிரீடாப் பிரமவாதம், சுத்தப் பிரம்மவாதம் என்னும் நான்கனுள் மாயாவாதம் என்ற ஒரு கிளையை மட்டும் மண்டல புருடர் ஏன் கொண்டார்? அவர் காலத்தில் தென்னகத்தில், சிறப்பாகத் தமிழகத்தில், மாயாவாதந்தான் விளக்கமாக இருந்திருக்கலாம். அதனாலேயே இவருக்கு முன் வாழ்ந்த மணிவாசகரும்

''மிண்டிய மாயாவாதம் என்னும்
சண்டமாருதம்'' (4:54-55) என்று

திட்ப நுட்பம் செறிந்த மாயாவாதம் என்னும் (முன்னே தோன்றிய மரங்களை எல்லாம் வீழ்த்தக் கூடிய) பெரும் சூறைக் காற்று என்பதாகக் கூறியுள்ளார் என எண்ணத் தோன்றுகிறது.

இனிப் பொருட்டொகை நிகண்டு புலப்படுத்துவதைப் பார்க்கலாம்.

''சைவம், பாசுபதம், மாவிரதம்,
காளா முகத்தொடு வாமம் வைரவம்,
இவை அகச்சமயம் என்ன இயம்புவர்''
(573)

என்று அகச்சமயம் ஆறையும் பிங்கலந்தை, சூடாமணி முறையிலேயே கூறுகிறது. ஆனால் புறச் சமயத்தைப் பற்றிக் கூறும் போது

''உலகாயதம், பௌத்தம், ஆருகதம்
மீமாம்சை மாயாவாதத்துடனே
பாஞ்சராத்திரம் அறுபுறச் சமயமே'' (574)

என சூடாமணியை அடியொற்றிச் செல்கிறது.

இனி அகராதி வகைகளைப் பார்ப்போம். அகராதிகள் பற்பலவும் ஒன்றனுக்கொன்று வேறுபட்டும் மாறுபட்டும் கூறுகின்றன. ஒரே அகராதி முன்னர்க் கூறியதற்கு முரணாகப் பின்னர்க் கூறும் அதிசயமும் காணப்படுகிறது. அனைவர் கருத்துக்களையும் திரட்டி இணைத்துப் பொருத்தம் கண்டு வெளியிடாமல் அவரவர் கூற்றை அப்படியப்படியே வெளியிட்டதால் நேர்ந்த குழப்பங்களே இவை.

பல அறிஞர்களின் துணைக் கொண்டு பல காலம் ஆய்ந்து மிக முயன்று பதிப்பித்த சென்னைப் பல்கலைக் கழகத்து ''தமிழ் அகராதி'' (TAMIL LEXICON) கூடச் செம்மையாக வகை தொகை செய்திலது. தொடக்கம் முதல் ஒரு தலைமை ஆசிரியரின் கீழ் நின்று செயல்படாததன் குறைபாடு பல்லாற்றானும் நன்கு புலப்படுகிறது.

நா. கதிரைவேற் பிள்ளை பதிப்பித்த ''தமிழ் மொழி அகராதி'' பலவாறு தொகைப் படுத்திக் கூறினும் முன்னுக்குப் பின் முரணுவதை இங்கும் காண முடிகிறது. முற்பகுதி 4ம் பக்கத்தில் ''அகப்புறச் சமயம்'' என்ற தலைப்பில்,

''வேதாகமோக்தச் சைவ சித்தாந்
தத்தைப் பிரமாண
மாகக் கொண்டும், அவற்றுக்கு
விலக்கான
கொள்கையைச் சாதிக்கும் சமயம்,
அது
பாசுபதம், மாவிரதம், காபாலம்,
வாமம்,
வைரவம், அயிக்கியவாத சைவம்
என்று
ஆறு வகைப்படும்''.

என்று, விளக்கிக் கூறிய பின், பிற்பகுதி 163ம் பக்கத்தில், ''அகச் சமயம்'' என்னும் தலைப்பில் அயிக்கிய வாத சைவத்தையும், காபாலத்தையும் நீக்கி விட்டு, மற்றைய நான்குடன் சைவம், காளாமுகம் இரண்டையும் கூட்டி,

''சைவம், பாசுபதம், மாவிரதம்,
காளாமுகம்,
வாமம், வைரவம் எனக் குறிப்
பிடுகிறது.

மேலும் ''அகப்பாட்டுச் சைவம்'' என்ற தலைப்பின்கீழ் (பிற்பகுதி பக்: 164) சைவத்தின் உட்பிரிவுகளாக ஆறுவகைச் சமயத்தை விளக்குகிறது. அவை: பாடாண வாத சைவம், சங்கிராந்த வாத சைவம், பேத வாத சைவம், சுத்த சைவம், அவிகார வாத சைவம் என்பனவாம்.

''புறச்சமயம்'' என்ற தலைப்பில் (பிற்பகுதி, பக்: 237) தருக்கம், மீமாம்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் என ஆறினையும், ''புறப்புறச் சமயம்'' என்ற தலைப்பில்( பிற்பகுதி பக்: 237) உலகாயதம், சௌந்திராந்திகம், யோகா சாரம், மாத்தி மிகம், வைபாடிகம் ஆருகதம் எனக்கூறும்.

பின்னர் அடுத்தடுத்து ''சமயம் ஆறு'' என்ற தலைப்புகளின் கீழ் (பிற்பகுதி, பக்: 203)

''சைவம், வைஷ்ணவம், சாத்தம், சௌரம், காணபத்தியம் கௌமாரம்; இவை வைதிக மதம் என்க'' என்றும்,

''கபிலமதம், கணாதமதம், பதஞ்சலி மதம், அக்ஷபாதமதம், வியாசமதம், ஜைமினி மதம், இவை வேதாந்த மதம் எனப்படும்'' என்றும்,

''பௌத்தம் ஜைனம் பைரவம், காளாமுகம், உலோகாயதம், சூனிய வாதம்; இவை புறச்சமயம் என்பர், வைதிகர்'' என்றும்,

''வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம். அன்றியும், புறச்சமய மாவன ஆறு:-

உலகாயதம், புத்தம், சமணம், மீமாம்சை, பாஞ்சராத்திரம், பாட்டாசாரியம். இவை சைவர் கொள்கை'' என்றும்,

தமிழ்மொழி அகராதி கூடியவரை தெளிய வைக்கும்.

மேலும் அதன் கீழேயே ''சமயவகை 34'' என்னும் தலைப்பின் கீழ் :-

''1. உலகாயதம், 2. சௌந்திராந்திகம், 3. யோகசாரம், 4. மாத்யமிகம், 5. வைபாஷிகம், 6. நிகந்தவாதம், 7. ஆசீவக வாதம், 8. பாட்டாசாரியம், 9. பிரபாகரம் 10. சப்தப்பிரமவாதம், 11. மாயாவாதம், 12. பாஸ்கரீயம், 13. நிரீச்சுர சாங்கியம், 14. சிவசாங்கியம், 15. விஷ்ணுசாங்கியம் 16. பாஞ்சராத்திரம், 17. தர்க்கம், 18. மீமாம்சை, 19. சைவம் 20. பாசுபதம், 21. மாவிரதம், 22. காளாமுகம், 23. வாமம், 24. வைரவம், 25. பாஷாண வாத சைவம், 26. நிமித்தகாரண பரிணாம வாத சைவம், 27. சுத்த சைவம், 28. பேத வாத சைவம், 29. சங்கிராந்த வாத சைவம் 30. அவிகார வாத சைவம், 31. ஐக்கிய வாதம், 32 ஏகான்ம வாதம், 33. சிவ சமவாதம் 34. கிரீடாப் பிரம வாதம்'' எனப்புலப்படுத்தும். இவற்றுள் காபாலிகம், பேதசைவம் முதலியவற்றைக் காணமுடியவில்லை. பௌத்தம் என்ற மூலமதம் இங்கே கூறப்படாமல் அவற்றின் கூறுகளான சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்யமிகம், வைபாஷிகம் ஆகிய நான்கும் புலப்படுத்தப்படுகின்றன. அங்ஙனமே, ஆருகதம் அல்லது சமணம் என்னும் மூலமதம் கூறப்படாமல்அதன் பிரிவுகளான நிகந்த வாதமும், ஆசீவகவாதமும் மொழியப்படுகின்றன.

ஆனால் வைசேடிகம், நையாயிகம் என்ற பிரிவுகளைப் பேசாமல் தர்க்கம் என்ற மூல மதமே இதில் உரைக்கப்படுகிறது. ஆனால் ஏகான்மவாதம் என்ற மூலமதத்தையும் கூறி அதன் பிரிவுகளான மாயாவாதம் சப்தப்பிரம வாதம், பா ஸ் க ரீ ய ம், கிரீடாப்பிரமவாதம் ஆகிய நான்கினையும் குறிப்பிடுகிறது.

இவற்றையெல்லாம் தோய்ந்து ஆய்ந்து பார்த்தால் ஒருவரம்பினைக் கோலிக்கொண்டு சொற்பொருள் அடைவுகளைத் தொகுத்துப் பகுத்து வகுத்துக் கொண்டு அகராதிகளைச் செம்மையாகப் பதிப்பிக்கவில்லை என்பது புலனாகாமற் போகாது.

இனி பல்வேறு சமயப் பெரியார்களின் சாத்திர தோத்திர ஆராய்ச்சி நூல்களும், விரிவுரைகளும் விளக்கங்களுமே ஓரளவுக்குத் துணை செய்யக் கூடியன. ஏன் ஓரளவுக்கு என்று கூறுகிறேனென்றால் அவை அனைத் தும் தத்தம் கொள்கைகளை வலியுறுத்தி நிலை நாட்டத்தோன்றியவை.

அவற்றைக் குறை கூறவோ அன்றிப் பழுது சொல்லவோ நான் தக்கவன் அல்லன். உயர்வற உயர்ந்த அவர்களுடைய பெருமை யையும் கீழுறக் கீழ்ந்த என் சிறுமையையும் என்றும் நன்கறிவேன்; மறவேன் எனவே நான் அவற்றின் வழியாக விருப்பு வெறுப் பற்ற நடுநிலை ஆராய்ச்சிக்குக் கிடைப்பன வற்றை நன்றிப் பெருக்குடன் கண்டும் கொண்டும் பயன்பெற முயன்றுள்ளேன்.

இத்துறையில் தமிழகத்தில் மலர்ந்த சாத்திரநூல்களும், அவற்றின் மணம் பரப் பும் உரைகளும் பலப்பல வாம். அவைகளுள் பரபக்கம் பற்றி ஆய்ந்து மறுக்கும் பகுதிகள் அனந்தம். அன்றியும் காளத்திப் புராணம் போன்ற தல புராணங்கள் பற்பல சமயங்கள் பற்றிய கருத்துக்களைப் புலப்படுத்திக் கொண்டிருக்கின்றன.

சிவஞானபோத, சிவஞான சித்தியார் மாபாடியங்களில் மிகப்பெரும்பாலான வகை தொகைகளைக் காணமுடிகிறது. சிவஞான முனிவர், வெள்ளியம்பலவாணர் ஆகிய இரு பெரியார்களின் ஆழ்ந்தகன்ற நுண் மாண் நுழை புலனும், தமிழ்மொழி, சம்ஸ் கிருதப் பேரறிவும் அவ்விரு பாடியங்களிலும் ஒளிவிட்டு மிளிர்கின்றன. அவற்றைத் தொகுத்து நோக்கினால் இச்சமய வகை களைப் பற்றி முன்னையோர் கருத்தைப் புரிந்து கொள்ளமுடியும்.

சமயங்களை எல்லாம் தொகுத்து, அற்ப பேதங்கள் காரணமாகப் பலப்பலவாய் பிரிந்துள்ளவற்றை எல்லாம் கணித்து, அத் தகையவற்றை அடிப்படை ஒற்றுமை நோக்கி, ஒவ்வொரு வகையில் அடக்கி நான்கு தொகைகளாக அமைத்துக் கொண்ட அருமைப்பாடும் தெள்ளிதிற் புலனாகும்.

அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என்பனவே அந்நான்கு தொகை. ஒவ்வொரு தொகையிலும் ஆறு வகைகளாக மொத்தம் 24 சமயவகைகள் அடங்கும். அவற்றையும் சிற்சில வகைகளில் அடக்கப்பட்ட பிரிவு களையும் இனிப் பார்ப்போம். இவை யாவும் சைவ நெறியினர் கொண்ட அமைப்பு என்ப தையும் நினைவில் இருத்திக் கொள்ள வேண்டும்.

1 அகச் சமயம்

(அ) பாஷாணவாத சைவம்
(ஆ) சங்கிராந்த வாத சைவம்
(இ) அவிவகார வாத சைவம்
(ஈ) பேத வாத சைவம்
(உ) நிமித்த காரண பரிணாம வாத சைவம்
(ஊ) சுத்த சைவம்

என்பன

2. அகப் புறச் சமயம்

(அ) பாசுபதம்,
(ஆ) மகாவிரதம்,
(இ) காளாமுகம்
(ஈ) வாமம்
(உ) வைரவம்
(ஊ) ஐக்யவாதம்

என்பன

3. புறச் சமயம்

(அ) தர்க்கம்
(ஆ) மீமாம்ஸம்
(இ) ஏகான்ம வாதம்
(ஈ) சாங்கியம்
(உ) யோகம்
(ஊ) வைஷ்ணவம்

என்பன

4. புறப்புறச் சமயம்

(அ) லோகாயதம்
(ஆ) சௌத்திராந்திகம்
(இ) யோகாசாரம்,
(ஈ) மாத்யமிகம்
(உ) வைபாடிகம்
(ஊ) ஆருகதம்

என்பன

இவற்றின் அடிப்படைக் கோட்பாடுகளைச் சுருக்கமாகத் தெரிந்து கொள்வோம்.

1. அ. பாஷாண வாத சைவம்:

ஆன்மாவிற்கு ஆணவமலம் (யான் எனது என்னும் செருக்கு) இயல்பாகவே உள்ளது. ஆதலால் கன்மம் (வினை), மாயை (மறைப்பு) ஆகிய இரண்டும் ஆன்மாவைச் சார்ந்தே நிற்கும். புண்ணிய பாவங்கட்கு ஏற்ப இறைவனால் அளிக்கப்படும் உடல் கொண்டு ஆன்மா இன்ப துன்பங்களைத் துய்க்கும். பற்றறிவு அற்றதே முத்தி. முத்தி பெற்ற ஆன்மாவும், மலமும் நீங்கி பாஷாணம் (கல்) போலக் கிடக்குமே யன்றி இறையுடன் சார்வ தில்லை என்னும் கோட்பாடு உடையதே பாஷாண வாத சைவம்.

1. ஆ. சங்கிராந்த வாத சைவம்:

காந்த ஈர்ப்பில் நிற்கும் இரும்பு போல, ஆன்மாவின் ஆணை வழி உடல் நிற்கக் கருவிகள் புல நுகர்ச்சி கொள்ளும். மலம் நீங்கிய பொழுது இறையருள் படிந்து ஆன்மாவைக் கடைத் தேற்றும். நீரிலிட்ட உப்பு நீரே ஆதல் போல, சிவத்தைச் சாந்த ஆன்மா சிவமே ஆக, அவ்வான்மாவின் முன் பசுகரணங்களும், சிவகணங்களாய் மாறி நிற்கும் சித்தியுற்றுச் சிவஞானம் பெறும். இக அறிவை விளக்கும் கருவிகளே பர அறிவையும் விளக்க வல்லவை. எனவே இறை குருவாக வேண்டுவதில்லை; அறிவை விளக்கும் கருவிகளால் மயக்கம் நேர்வ தில்லை. என்னும் கோட்பாட்டை உடையதே சிவ சங்கிராந்த வாத சைவம்.

1. இ. அவிவகார வாத சைவம்:

உடம்பினுள் அறிவாய் விளங்கும் ஆன்மா ஐம்பொறிகளுடனும் கூடிப் புலநுகர்வு கொள்ளும். மலநீக்கமும், இறையருளும் பெற்றதும் சிவஞானம் எய்தி இறையடி நீழலின்பத்தில் திளைக்கும். பின்னர் மூலப் பொருளின் உதவியையும் நாடாது, ஆன்மா அறிவிப்பான் இன்றித் தானே அறியும் தன்மைத்து, முழுமுதல் உயிர்க்குச் சுட்டிக் காட்டுவதன்றித் தானும் ஆன்மாவுடன் கூடி நின்று காண்பதில்லை. என்பது அவிவகார வாத சைவத்தின் கோட்பாடு.

1. ஈ. பேதவாத சைவம்

ஆணவம், கன்மம், மாயை என்னும் முக் குற்றமும் ஆன்மாவை இயல்பாகவே பற்றி நிற்பவை; புலன் வழிச் சென்ற அறிவு, பக்குவமடைந்த போது செயலிற் றடைப் படாது நிற்கும்; அப்பொழுது அவ்வான்மா இறையருளால் மும்மலம் அற்று பெறு வானும் பேறுமாக விளங்குவதே முத்தி, அல்லது விடுபேறு. இக்கோட்பாட்டை உடையதே பேத வாத சைவம்

1. உ. நிமித்த காரண சைவம்:

இது சிவாத்துவித சைவம் என்றும், பரிணாம வாத சைவம் என்றும் வழங்கப் படும். பல்லாற்றானும் சைவ சித்தாந்தத் துடன் ஒருமித்த கருத்துடைய இது பசுவும், பாசமும் பதியின் பரவி நிற்றலில் விரவி யுள்ளதால் அவை தனி மூலங்கள் ஆகா; அவற்றிற்கும் பதிக்கும் உள்ள பேதம் குணம்-குணிக்கு இடையுள்ளதைப் போல அகப் பேதமே யன்றிப் புறப்பேதமல்ல; அடி, கிளை,





வாதுகள் எல்லாம் சேர்ந்து மரம் ஆவதைப் போல யாவுமே அழியாத உண்மைப் பொருள் களாம்; ஆன்மாவுக்கு அறிவுணர்வு இல்லை; ஆன்மாவில் நின்று அறிவது உண்மைப் பொருளான சிவமே யாகும்; இருவினைப் பயனால் விளையும் மறுபிறவி ஆன்மாவின் பொருட்டுச் சிவனே மேற் கொள்வதாகும்; சிவத்தின் தன்மையே ஆன்மாவின் தன்மை; இறையைக் கிட்டிய ஆன்மா இறையோடு கலந்து விடும்; எனவே அறிவதும் அறியப் படுவதும் ஆகிய இரண்டில்லை, என்னும் கோட்பாட்டை யுடையது நிமித்த காரண சைவம் என்னும் சிவாத்துவித சைவம்.

சமவாத சைவம்: பதி அறிவு, பாச அறிவு, பசு அறிவு ஆகிய மூன்றுமே இயல்பானவை. பாச அறிவு பசு அறிவால் ஒழியும். பசு அறிவோ பதியறிவால் நீங்கும். பாச அறிவும் பசு அறிவும் அற்ற நிலையில் பதியறிவு பெற்ற ஆன்மா எதையும் உணர்த்தாமல் சுத்த அறிவாய்த் துலங்கும். அவ் ஆன்மா பதியே நினைவாய், பதியே ஆகி, பதியின் தொழிலையும் ஆற்றி விளங்கும். ஆன்மா பிறர் உதவியின்றித் தானே உணரும் ஆற்றலுடையது. பசுத்தன்மை அற்றதும் முற்றறிவு முதலான எண்குணங்களையும் எய்தி பதி உண்மையையும் தேர்ந்து தெளிகிறது. அவ்வறிவினால் மூலப்பொருளை உணர்தலே முத்திக்கு அடிப்படை. இறையோடு இரண்டறக் கலத்தல் என்பது வேண்டுவதில்லை; என்னும் கோட்பாட்டை உடையதே சிவ சம வாத சைவம்.

1. (ண) சுத்த சைவம்:

சித்தாந்த சைவ நெறியை மிகப்பெரும்பாலும் ஏற்றுக்கொண்டு, வீடு பேறடைந்த ஆன்மா சிவபாத்தில் ஐக்யம் உற்று ஒரு பயனும், ஒரின்பமு மின்றி விளங்கும் என்ற கோட்பாட்டை உடையது. சைவம் என்றும், சாமானிய சைவம் என்றும், சுத்த சைவம் என்றும் பெயர் பெறும். இதற்கும் மேம்பட்டது சித்தாந்த சைவம் என்பர்.

சித்தாந்த சைவம்:

பிரத்யக்ஷம்; அனுமானம்; ஆகமம் ஆகிய மூன்றையுமே அளவை (பிரமாணம்) ஆகக் கொண்டு இறை உண்டு, அது அநாதி; அவ்விறையே சிவபரம் பொருள்; அச்சிவமேயன்றி எண்ணிறந்த உயிர்கள் அநாதியாக உள; அவ் வுயிர்கள் ஆணவ மலத்தால் கட்டுண்டவை; அதன் காரணமாய் ஆன்மாவுக்கு கன்ம மலம் உண்டு; உயிர்கட்கு மாயாமலம் உறைவிடம்; அம் மலத்தை ஊட்டுகின்ற சக்தி திரோதான (உண்மையை மறைக்கும்) மலம் ஆகும்; அதனால் விளையும் மாயா காரியங்களான மாயேய மலமும் உண்டு; வினை ஆகாமியம், சஞ்சிதம் பிராரத்வம் என மூவகை ஆம்; வினைக் கீடான பலனை அனுபவிக்கச் சுவர்க்கம் நரகம் போன்ற உலகங்கள் உள, பிறந்தும் இறந்தும் வருதலால் மறுபிறப்புக்கள் உண்டு: பிறப் பிறப்பு என்னும் கடல் கடக்க அரிய மரக்கலங்களாக விளங்கி உதவுபவை வேதம், சிவாகமம் ஆகியவையாம்; அவைகளில் விலக்கப்பட்டனவற்றைத் தீண்டாமலும், விதிக்கப்பட்டனவற்றை கை விடாமலும் ஒழுகல் நல்வினையாம்; மாறுபட்டது தீவினையாம்; அவ்விருவினைகட்கு ஈடான பயன் துய்த்தல் மூன்றாகும்; அவை இம்மைப் பிறப்பில் தானே அனுபவித்தல் என்னும் திருஷ்ட சன்ம போக்கியம், இம்மையிலும், நரக, சுவர்க்க உலகத்திலும், மறுபிறப்பிலும் அனுபவிக்கத் தக்கதான திருஷ்டா திருஷ்ட சன்ம போக்கியம் நரக, சுவர்க்க உலகத்திலும், மறுபிறவியிலும் அனுபவிக்கத் தக்கதான அதிருஷ்ட சன்ம போக்கியம் என மூன்றாகும்; அப்பலன்களை அனுபவிக்கச்செய்பவன் இறைவனே; வினைக்கீடான பலனை அனுபவிக்கத்தான் வேண்டும் என்றாலும் ஒரு வினைக்கு மற்றொரு வினை மாற்றாகும். சிவாகம நெறியில் அறம் புரிதலே அது; அவ்வறங்களுள் வேள்வி நல்லது; அதனின் உயர்ந்தது ஜீவகாருணியம்; அருள் இன்றிக் கருணை பிறவாது ஆதலின் எவ்வித உயிரினிடத்தும் அருள் பூண்டொழுக வேண்டும். அருளிலார்க்கு வீடு பேறில்லை.

அப் பேற்றை அடைய உண்மைப் பொருள், இன்மைப் பொருள் அறிவு அடிப்படையாகும். இன்னும் பல நெறிகளும் ஆகமங்களால் உணர்த்தப்படும். அவற்றைப் பற்றி இறைவனை மன மொழி மெய்களால் வழி பட்டால் இருவினை ஒப்பு ஏற்பட்டு, குற்றம் நீங்க, சத்தினி பாதம் விளங்கும் பக்குவ மடைந்தவர்க்கு இறைவன் குருவாகி வந்து உபதேசித்து எல்லாக் குற்றங்களையும் போக்கி சிவானந்தப் பெருவாழ்வை அருள் வான். இங்ஙனம் சீவன்முக்தர்களானோர் முடிவில் சிவானந்த முக்தியடைவர். சிவன் திருவடி நீழலில் அமர்ந்து வேறு நினைவும் தொழிலு மின்றிச் சிவமாக வாழ்தலே சிவா னந்த முக்தி.

இதை சைவம், வைதிக சைவம் என்றும் வழங்குவர்.



## மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

தொண்ணூற்றாறு வகையாகக் கூறப் படும் பிரபந்தங்களுள் பிள்ளைத்தமிழ் ஒன்றா கும். 'பிள்ளைக்கவி' என இதை வெண்பாப் பாட்டியல் பேசும். 'பிள்ளைப்பாட்டு' என் றுரைக்கும் பன்னிரு பாட்டியல். ஆனாலும் 'பிள்ளைத்தமிழ்' என்பதே பெருவழக்காய் உள்ளது.

தொண்ணூற்றாறு பிரபந்தங்களிலும் 'தமிழ்' என்ற மகுடத்தை யுடையது இஃதொன்றே! தமிழே பிள்ளைத்தமிழ் தான். அதன் சீரிளமைத் திறந் தெரிந்து துய்த்து மகிழப் 'பிள்ளைத் தமிழ்' என்ற பிரபந்த அமைப்பு பெரிதும் உதவும்.

பாட்டுடைத் தலைவன் அல்லது தலைவி யின் குழந்தைமையும், தமிழின் இளமையும் ஒருங்கே சேரும்பொழுது மகிழ்ச்சிக்குக் குறை யேதும் நிகழுமோ? ''மும்முதற்கும் வித்தாய், வித்தின்றி விளைந்த பரமானந்தத்தின் விளை வாய், பழமறையின் குருத்தாய்'' விளங்கும் அன்னை அண்டசராசரங்களை எல்லாம் ஈன்றவ ளாயினும் கன்னியே யன்றோ? அங்ங ஙமே கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளுவம் முதலான பல மொழிகளை ஈன் றளித்த தாயான தமிழும் கன்னியே யன்றோ?

என்றும் இளையராய் உள்ள அருள் ஞானச் செல்வர் ஸ்ரீ குமரகுருபரர் வாக்கில் அங்கயற்கண்ணியும், செந்தமிழ்த்தேவியும், இளமை நலம் கொழித் தின்பூட்டுகின்றனர். இந்த உண்மையை நூலினுள் நுழைந்து காண மாட்டாதவர்களும் தெரிந்து கொள்ள வேண்டு மென்றுதான் பிள்ளைத்தமிழ் அரங் கேற்றும் போது அன்னை மீனாட்சி குழந்தை உருவில் வந்திருந்து கேட்டு மகிழ்ந்து மன்னன் மார்பிலிருந்த முத்துவடத்தைக் கழற்றி ஸ்ரீ குமரகுருபரர்க்கு அணிவித்து மகிழ்ந்தனள் போலும்!

பிள்ளைத்தமிழ் இருவகைப்படும். அஃது ஆண்பாற் பிள்ளைத்தமிழ் என்றும், பெண் பாற் பிள்ளைத்தமிழ் என்றும் பேசப்படும்.

காப்புப் பருவம், செங்கீரைப் பருவம், தாலப்பருவம், சப்பாணிப்பருவம், முத்தப் பருவம், வருகைப்பருவம், அம்புலிப்பருவம் ஆகிய ஏழு பருவங்களும் இருபாற் பிள்ளைத் தமிழுக்கும் பொதுவானவை.

சிற்றிற் பருவம், சிறுபறைப் பருவம், சிறு தேர்ப் பருவம் மூன்றும் ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்கு உரியன.

சிற்றில் சிதைத்தலையும், சிறுபறை கொட்டு தலையும், சிறுதேர் உருட்டுதலை யும், பெண்பாற் பிள்ளைத் தமிழில் பாடலாகா தெனப் பாட்டியல்கள் பலவும் கூறும்.

''சிற்றில் இழைத்தல், சிறு சோறாக்கல், குழமகன் (குழந்தை) வைத்துச் சீராட்டுதல், மணிகள் புனைந்த ஊஞ்சல் ஆடுதல், பனி ரண்டாம் ஆண்டில் காமவேள் நோன்பு நோற் றல் ஆகிய இவை பெண்பாற் பிள்ளைத் தமிழில் விரும்பிப் பாடுதற்குரியன எனப் புலவர் கூறினர்'' என்னும் பன்னிரு பாட் டியல்.

பிங்கல நிகண்டோ விளையாடும் பாவைக்கு குழமணம் பேசுதல், காமவேள் நோன்பு நோற்றல், குளிர் புனலாடல், பொம்மை வைத்து விளையாடல், அம்மானை ஆடல், கழற்காயாடல், பந்தடித்தல், சிறு சோறிடுதல், சிறுவீடு கட்டல், ஊஞ்சல் ஆடல், ஆகியவை பெண்பாற் பிள்ளைத்தமிழில் பாடற்குரியன என்கிறது.

பெரும்பாலான பெண்பாற் பிள்ளைத் தமிழ்களில் அம்மானை, நீராடல், ஊஞ்சல் ஆகிய பருவங்களே காணப்படுகின்றன. ஸ்ரீ குமரகுருபரரும் இம்மூன்றையுமே பாடி யருளுகிறார்.

காப்புப் பருவத்தில் முதற்பாடலைத் திருமாலுக்கு அர்ப்பணித்த நிலையைப் பார்க்கும்பொழுது ஸ்ரீ குமரகுருபரர்க்கு மாற்றருஞ் சிறப்பின் மரபு வழுவாமையிலே எத்துணை ஆழ்ந்த பிடிப்பு இருந்திருக்கிற தென்பது தெள்ளிதில் புலனாகும்.

காப்புப் பருவத்தில் முதற் பாடலான திருமால் அருள் வேட்டலில் திருமாலை எப்படி அழைக்கிறார்?

பழமறைகள் முறையிடப்
பைந்தமிழின் பின்சென்ற
பச்சைப்பசுங் கொண்டலே!

என்று விளிப்பதில் எத்துணைப் பொருள் வளம் உள்ளது. திருமழிசையாழ்வார் அன்றொரு நாள் கச்சி மணிவண்ணனைப் பாய் சுருட்டிக் கொள்ளப் பணித்த கதை புலப்படுகிறது.

''கணிகண்ணன் செல்கின்றான்
காமருபூங் கச்சி
மணிவண்ணா! நீ கிடக்க
வேண்டா-துணிவுடைய
செந்நாப் புலவன்யான்
செல்கின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்!''

என்று மழிசைப் பிரான் கூறியதும் கிடந்த கோலப் பெருமாள் கோயிலை வறிதே கிடக்க விட்டு விட்டுப் புறப்பட்டு உடன் சென்ற கதை நினைவூட்டப்படுகிறது.

அதற்கு மேலும், வைணவ சம்பிரதாயத்தில் உள்ள ஓர் அருமையான நிகழ்ச்சியும் புலப்படுத்தப்படுகிறது. ''பழமறைகள் முறையிட'' என்ற சொல்லையும் நோக்கினால், தொன்மையான வேதங்கள் ''எங்களை விட்டுச் செல்கின்றாயே'' என்று புலம்பி ஓலமிட்டுத் தன்னைத் தொடரவும், தான் திவ்யப் பிரபந்தச் சுவையிலே ஈடுபட்டு தமிழ் மறை ஓதுவோரைத் தொடர்ந்து அவர்கள் பின் செல்லும் அந்தக் காட்சி நம் மனக்கண் முன் வருகிறது. இல்லையா?

ஸ்ரீ குமரகுருபரரின் தமிழ்ப்பற்று சிவப் பற்றுக்குச் சிறிதும் குறைந்த தல்ல என்பதை நூலில் பரக்கக் காணலாம். நூலின் காப்புச் செய்யுளில், ''போர்க்களிற்றைத் துதிப்போம்'' என விநாயகப் பெருமானைத் தொழுவது எதற்காகத் தெரியுமா? ''தமிழ் தழையவே'' என்று செய்யுளை முடிக்கின்றார். ''சொல் தமிழ்'' — புகழ் மிக்க தமிழ் நூல் என்று பொருள் விரியினும் தமிழ்மொழி தழைப்பதற் காகவே என்பதுதானே நேர் பொருள்?

நூலில் எத்தனை எத்தனை இடங்களிலே ''தமிழ்'' இடம் பெற்று இன்பம் சுரக்கின்றது? வேறெந்தப் பிள்ளைத் தமிழிலும் இத்தனை ''தமிழ் வளம்'' காணுமாறில்லை. முப்பது இடங்கட்கு மேல் ''தமிழ்'' மலர்ந்து மணக்கிறது!

முத்தமிழ், மும்மைத்தமிழ், தமிழ்க்கடலின் அன்பின் ஐந்திணை, பண்ணுலாம் வடி தமிழ்ப் பைந்தாமம், முதுசொற் புலவர் தெளித்த பசுந்தமிழ், தெளிதமிழ், தென்+அம்+தமிழ், தெய்வத் தமிழ், முதுதமிழ், செஞ்சொற்றமிழ், நறைபழுத்த துறைத் தீந்தமிழ், என்றெல்லாம் தமிழ் மணக்கிறது.

மீனாட்சி அம்மையைத்தான் எப்படி எல்லாம் விளித்து மகிழ்கின்றார்!

மதுரைத் துரைமகள், மதுரைத் துரைப் பெண், தமிழ் மதுரைக்கரசு, முதுதமிழ் உததியில் வருமொரு திருமகள், தமிழ் மதுரைக் காவலன் மகள், சங்கம் வளர்ந்திட நின்ற பொலன் கொடி, தமிழொடு பிறந்து பழ மதுரையில் வளர்ந்த கொடி, தெய்வத் தமிழ்க்கூடல் தழையத் தழைத்த பெண் திருப்பாவை என்றெல்லாம் வாய் மணக்கக் கூறுவது நம் செவிக்கமுதமாய் தித்திக்கின்றன வன்றோ? ஒவ்வொன்றிலும் எவ்வளவு பொருள் செறிந்திலங்குகிறது?

''தமிழொடு பிறந்து பழ மதுரையில் வளர்ந்த கொடி!'' தமிழின் பழமையை இறைமையுடன் இணைத்துப் பேசப்படுகின்றதா? அன்றி அநாதியான கடவுள் தன்மை காலங்கணிக்க வொண்ணாத் தமிழ்மொழியுடன் ஒப்பிட்டுக் காட்டி நிலைநாட்டப்படுகிறதா? முழுநிலை அறிவினரான ஸ்ரீ குமரகுருபரர் முழுமுதற் பொருளையும் உயர்தனி மொழியையும் உணர்ந்த அருமையும் உணர்த்தும் பெருமையும் நமக்கெல்லாம் கூட நன்கு புலனாகின்றன வன்றோ?

''செழுமறை தெளிய வடித்த தமிழ்ப் பதிகம்'' என்று திருஞான சம்பந்தப் பெருமாள் அருளிய திருநெறியை தமிழாம் தேவாரத்தைச் சுட்டுகின்றார். வளமான வேதங்களின் மெய்ப்பொருளைத் தேர்ந்து தெளிவடைவதற்கு உறு துணையாக உள்ளவை. தேவாரத் திருப்பதிகங்களே என்பதை மிக அழுத்தமாகக் கூறி மகிழ்கிறார். இந்த வரியை நோக்கும் போது ஸ்ரீ வேதாந்த தேசிகன் திருவாய் மொழியைப் பற்றிக் கூறிய

''செய்யதமிழ் மாலைகள் நாம் தெளிய ஓதித்
தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே''

என்ற சொற்றொடர் நம் நினைவுக்கு வருகின்றது.

ஸ்ரீதேசிகனுக்கும் முன்னர் கவிச்சக்கரவர்த்தி பாடியருளிய சடகோபரந்தாதியில் உள்ள

''அந்த மிலாமறை ஆயிரத் தாழ்ந்த ஆரும்பொருளை
செந்தமி ழாகத் திருத்தில னேல்நிலத் தேவர்களும்
தந்தம் விழாவும் அழகுமென் ஆம்தமி ழார்கவியின்
பந்தம் விழாவொழு குங்குரு கூர்வந்த பண்ணவனே!''

என்ற பாடலும் நம் கருத்தை ஈர்ப்பதாகும்.

மீனாட்சியம்மையை ஓரிடத்தில்

''முதுதமிழ் உததியில் வரும் ஒரு திருமகள்'' என்று கூறுகின்ற அருமைப்பாடு எண்ணி எண்ணி இன்புறத் தக்கதாகும். அதுதிருமகளான இலக்குமியோ பாற்கடலில் தோன்றியவள். அவளுடன் பதுமநிதி, சங்கநிதி, மதி, அமுதம் ஆகியனவும் தோன்றின. ஆனால் இத் திருமகளான மீனாட்சி பழமையான தமிழ் என்னும் கடலில் தோன்றியவளாம். பதுமம், சங்கம், மதி, அமுதம் ஆகியவை இவளுடன் கூடத் தனித்தனியாகத் தோன்றவில்லையாம். பின்னே? பதுமம் திருமுகமாகவும், சங்கம் திருக்கழுத்தாகவும், மதி திருநுதலாகவும், அமுதம் திருவாய்ச் சொல்லாகவும் இணைந்தே தோன்றி என்றும் இணைந்தே உள்ளனவாம். அந்தப் பகுதியை மட்டும் கண்டுவிட்டு இக்கட்டுரைக்கு முற்றுப் புள்ளி வைக்கலாம்.

''.................
பதுமமொ டொழுகொளி வளையுதி னளினமுகத்துமி டற்றுமுறப்
பனிமதி யொடுசுவை யமுதமும் நுத லொடுசொற்குத லைக்கணிநீஇ
முதுதமிழுததியில் வருமொரு திருமகள் முத்தம ளித்தருளே!''

இங்ஙனம் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழிலே எத்தனை எத்தனையோ சீர்த்தி மிகு நேர்த்திகளை கண்டு மகிழச் செய் தருளும் ஸ்ரீகுமர குருபரர்க்கு நம் பணிவார்ந்த வணக்கத்தைச் செலுத்தி நன்றி பாராட்டுவோமாக!

ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் அருளிய பிள்ளைத்தமிழ் இரண்டு; ஒன்று பெண் பாற் பிள்ளைத்தமிழ்; அதுவே மீனாட்சி யம்மை பிள்ளைத் தமிழ். மற்றொன்று புள்ளிருக்கு வேளூர் முத்துக் குமார சுவாமிப் பிள்ளைத்தமிழ். அஃது ஆண்பாற் பிள்ளைத் தமிழ். இரண்டும் ஒன்றை ஒன்று விஞ்சி நிற்கும் இயல்பின. இன்று இங்கே நம்மால் பேசியும் கேட்டும் மகிழ்வதற்குரியதாயுள்ளது பின்னையதே!

இதனை புள்ளிருக்கு வேளூர்க் குமார தேவர் பிள்ளைக்கவி எனவும், புள்ளிருக்கு வேளூர்ச்சேனாபதிப் பெருமாள் பிள்ளைத் தமிழ் எனவும், முத்தையன் பிள்ளைத்தமிழ் எனவும் வழங்கப் பெற்றதாக அறிகிறோம். ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் காப்புப் பருவத் தில் காத்தற்கடவுளான திருமாலை வேண்டும் பொழுது, "கொத்து முத்தமிழ் மொய்த்த கந்தபுரி முத்துக்குமாரனைத் தனிபுரக்க!" என்பதால் முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ் என்பதே பொருத்தமாகலாம்.

மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில் காப்புப் பருவத்தில் திருமால் முதலாக முப் பத்து மூவர் ஈராக முருகன் உள்படப் பதினொருவரைப் பரவுகின்றார். ஆனால் முத்துக் குமாரசாமி பிள்ளைத் தமிழில் திரு மால் முதலாக முப்பத்து மூவர் ஈராக பதின் மரையே பரவுகின்றார். முருகன் இங்கே இடம் பெற்றானில்லை. காரணம் பிர பந்தமே அவன் பேரில் ஆனதால் தான். அங்கு மீனாட்சிக்கு காப்பாற்றுமாறு வேண்டிப் பாடல் இல்லை. ஆனால் துர்க் கையை வேண்டுகிறார். இங்கு முருகனை வேறு எந்தப் பெயராலும் வேண்டினாரில்லை.

இப்பிள்ளைத் தமிழில் வைத்தீச்வரன் கோவில் பத்து வேறு பெயர்களால் குறிக்கப் பெறுகிறது அவையே :

1. கந்தபுரி, 2. புள்ளூர் 3. வேளூர், 4. பருதிபுரி, 5. வேதபுரி, 6. தினகரபுரி, 7. பருதிப்பதி, 8. வயித்திநாதபுரம், 9. சடாயபுரம், 10. வேதப்பதி என்பன ஆம். இவற்றுள் கந்தபுரி 42 இடங்களில் பேசப்படுகிறது. அடுத்து புள்ளூர் 15 இடங் களிலும், வேளூர் 10 இடங்களிலும் பருதிபுரி 8 இடங்களிலும், வேதபுரி 7 இடங்களிலும், தினகரபுரி, பருதிப்பதி, வயித்திநாதபுரம் ஆகிய மூன்றும் மும்மூன்றிடங்களிலும் சடாயு புரம் வேதப்பதி இரண்டும் ஒவ்வோரிடத்திலும் குறிக்கப் பெறுவதைக் காணலாம்.

கந்தபுரி என்பதே சுவாமிகளைக் கவர்ந்த பெயர் என நாம் கருதலாம். கந் தன் என்ற சொல் நல்ல தமிழ்ச் சொல். கந்து + அன் = கந்தன்; கந்து என்றால் பற்றுக்கோடு. அன் ஆண்பால் பெயர் விகுதி. கந்தன் என்றால் பற்றுக்கோடாகவுள்ளவன் எனப்பொருள்படும். கந்தன் என்பது "ஸ் கந்தன்" என்ற சமஸ்கிருதச் சொல் லின் தற்பவம் என்று சிலர் கூறுவது கொள்ளத்தக்கதல்ல. அநியாயமுமாகும்.

இப்பிள்ளைத் தமிழில் உள்ள 101 பாடல் களில் 17 பாடல்கள் நல்ல சந்தப் பாடல்கள். யாவும் அளவியல் சந்த விருத்தம்; அஃதாவது. அடிதோறும் எழுத்தெண்ணிக்கையால் அளவு ஒத்துவரும் விருத்தங்களாம்.

1. வைத்தியநாதன் மீதுள்ள பாடல் அடிதோறும் 26 எழுத்தால் ஆன விருத்தம்.

2. தையல்நாயகி மீதுள்ள விருத்தம் அடிதோறும் 27 எழுத்துக்கள் உள்ளது.

3. கற்பகப் பிள்ளையார் மீதுள்ள விருத்தம் அடிதோறும் 26 எழுத்துக்களால் ஆனது.

4. சப்தமாதர்கள் மீது பாடிய விருத்தம் 28 எழுத்துக்களால் ஆனது.

5. முப்பத்து முக்கோடி தேவர்கள் மீது பாடிய விருத்தம் 30 எழுத்துக்களாலான அடிகளையுடையது.

6. செங்கீரைப் பருவத்தில் 9, 10வது விருத்தங்கள் அடிதோறும் 28 எழுத்துக்களை யுடையன.

7. அங்ஙனமே தாலப்பருவத்தில் 9, 10 ஆவதாக உள்ள விருத்தங்கள் அடி தோறும் 26 எழுத்துக்களையுடையன.

8. சப்பாணிப் பருவத்தில் உள்ள 9, 10ஆம் பாடல்கள் அடிதோறும் 36 எழுத்து களையுடையன.

9. முத்தப்பருவத்தில் 9, 10ஆம் பாடல்கள் அடிதோறும் 42 எழுத்துக்களை யுடையன.

10. வருகைப்பருவத்தில் உள்ள 9, 10ஆம் பாடல்கள் அடிதோறும் 42 எழுத்துக் களையுடையவை.

11. அடுத்து சிறுபறைப்பருவத்தில் உள்ள 9, 10ஆம் பாசுரங்கள் அடிதோறும் 38 எழுத்துக்களையுடையன.

காப்புப்பருவத்தில் ஐந்து பாடல்கள் சந்தக்கவியாக அமைந்துள்ளன. அஃதும் அளவியல் சந்தம். எஞ்சிய ஒன்பதில் அம்புலி, சிற்றில், சிறுதேர் அல்லாத ஆறு பருவங் களிலும் 9, 10ஆம் பாடல்கள் சந்தக்கவி களாக உள்ளன. அனைத்திலும் 4 பாடல் கள் அளவியல் சந்தமாகவும் எஞ்சிய பதின் மூன்றும் அளவியற் தாண்டகமாகவும் உள்ளன.

மீனாட்சி பிள்ளைத் தமிழில் எங்ஙனம் ''தொடுக்கும் கடவுள்'' என்ற தொடக்கத்துப் பாடல் விழுமியதாகக் கருதப்படுகின்றதோ அங்ஙனமே இப்பிள்ளைத் தமிழில்

''உலகு குளிர எமது மதியில்
ஒழுகும் அமுத கிரணமே''

என்ற தொடக்கத்துப்பாடல் அருமையும், பெருமையுடையது.

ஸ்ரீ குமரகுருபரர் மொழிப்பற்று மிகுதி யும் உடையவர் என்பதை மீனாட்சிப் பிள்ளைத்தமிழ் புலப்படுத்துவதைப் போல இப்பிள்ளைத் தமிழும் நமக்கெல்லாம் நன்கு உணர்த்திக் கொண்டிருக்கிறது.

கொழி தமிழ்க்கவி தழையவே
முத்தமிழ் மொய்த்த கந்தபுரி
பசுந்தமிழின் இசை பயின்ற பெடை
தமிழ்வேளூர்

சங்கத்தமிழின் தலைமைப்புலவ
தோலாத முத்தமிழ்
கொழி தமிழ்
தெளி தமிழ்

மும்மைத் தமிழ்
முதற் சங்கத் தலைப்பாவல
அஞ்சொற்றமிழ்
முத்தமிழ் பயில் பருதிப்பதி
வடகலை தென்கலையொடு
பயிலும் கவி வாணர்
தெள்ளுதமிழ்

என்றெல்லாம் மிளிரும் சொற்றொடர்கள் சுவாமிகளின் செந்தமிழ்ப் பற்றுக்கு ஒப்பற்ற எடுத்துக்காட்டுகளாம்.

முருகப்பெருமான் சுவாமிகட்குப் பேரருள் சுரந்த பெம்மான். எனவே அவர்கட்கு முருகனிடம் எல்லையிலா ஈடுபாடு இருந் திருக்கும். அன்றியும் தமக்கு அப்பெருமா னுடைய திருநாமங்களுள் ஒன்றே அமைத் திருப்பதை எண்ணி எண்ணி மகிழ்ந்திருக்க வேண்டும். அந்த வியப்பைப் பயன்படுத்திக் கொண்டு வருகைப்பருவத்தின் முதல் ஐந்து பாடல்களின் ஈற்றடியில், மகுடமாக,

குரவு கமழ்தரு கந்தபுரியில் அருள்
குடிகொண்ட குமரகுருபரன் வருகவே!

என்று கூறுவது நயமாகவும் இனிமையாக வும் உள்ளது.

''நாடும் பொருட்சுவை, சொற்சுவை, தோய்தர, நாற்கவியும், பாடும் பணியிற் பணித்தருள்வாய்!'' என்று சகலகலா வல்லியை வேண்டும் ஸ்ரீகுமரகுருபரர் அங்ஙனமே சிறந்து விளங்குவதை ஏனைய பிரபந்தங்களைப்போல இப்பிள்ளைத் தமிழும் நமகெல்லாம் புலப்படுத்திக் கொண்டு விளங்குகிறது.



ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர் தம் உறவுவேண்டும்
உள்ஒன்று வைத்துப் புறம்மொன்று பேசுவார்
உறவுகல வாமைவேண்டும்
பெருமைபெறு நினதுபுகழ் பேச வேண்டும் பொய்மை
பேசா திருக்கவேண்டும்
பெருநெறி பிடித்தொழுக வேண்டும்மத மானபேய்
பிடியா திருக்கவேண்டும்
மருவுபெண் ஆசையை மறக்கவே வேண்டும்உனை
மறவா திருக்கவேண்டும்
மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும் நோயற்ற
வாழ்வில்நான் வாழவேண்டும்
தருமமிகு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே.

— திருஅருட்பா

# ஸ்ரீகுமரகுருபரர் அருளிய மதுரைக் கலம்பகம்

கலம்பகம் என்பது பிரபந்தவகை தொண்ணூற்றாறில் ஒன்றாகும். பல் வேறான செய்யுட்கள், அகம், புறம் என்னும் பொருட் கூறுபாடுகள், வகைவகையான சுவைகள், முதலியன திரம்பிய கதம்ப அமைப்பே கலம்பகமாகும். கலம்பகத்தில் பதினெட்டு உறுப்புக்கள் அமையும். அவையே:-

புயவகுப்பு, மதங்கம், அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல்

என்பவையாம். பாவும், பாவினங்களும், சந்தச் செய்யுள்களும் கலம்பகத்தில் அமையும்.

ஒருபோகு, வெண்பா, கலித்துறை ஆகிய மூன்றும் நூலின் தொடக்கத்தில் அமைதல் வேண்டும். இதை "முதலுறுப்பு" என்று வெண்பாப் பாட்டியலும், "முதற் கலியுறுப்பு" என்று இலக்கண விளக்கப் பாட்டியலும் கூறும். முதலுறுப்புக்கு முன், கடவுள் வணக்கம், ஆசிரிய வணக்கம், அவை அடக்கம் ஆகியன சில கலம்பகங்களிற் காணப்படுகின்றன.

முதலுறுப்பு அல்லாமல், இலக்கண ஆசிரியர்கள், நூலின் அகத்தே வரும் செய்யுள் வகை பற்றியும் கூறுகின்றனர் அவைதாம்:- மடக்கு, மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரிய விருத்தம், கலி விருத்தம், கலித்தாழிசை, வஞ்சி விருத்தம், வஞ்சித்துறை, வெண்டுறை இவற்றினிடையே வெண்பா, கலித்துறை கலந்துவர அந்தாதித் தொடையாக அமைய வேண்டும் என்றும் நூலின் இறுதி முதலொடு மண்டலித்து அமைய வேண்டும் என்றும் கூறுவர்.

தேவர்க்கு 100ம், முனிவர்க்கு 95ம், மன்னர்க்கு 90ம் அமைச்சர் முதலியோர்க்கு 70ம், வணிகர்க்கு 50ம், வேளாளர்க்கு 30ம் என்று செய்யுட் தொகைக்கு வரம்பு கட்டியுள்ளனர். ஆனால் இவை அப்படியே எல்லாக் கலம்பகங்களிலும் காணப் பெறவில்லை. கூடியும், குறைந்துமே காணப்பெறுகின்றன. ஆளுடைப்பிள்ளையார் திருக்கலம்பகத்தில் 49 செய்யுட்களே காணப்படுகின்றன. மேலும் இறுதி முதலொடு மண்டலிக்கவுமில்லை.

பதினெட்டு உறுப்புகள் என்ற வரம்பையும் இலக்கியம் படைத்தவர்கள் யாவரும் அப்படியே மேற்கொண்டார்களில்லை. பதினெட்டிற்குக் குறைவாக 8, 12, 16, 17, உறுப்புகளும் பதினெட்டிற்கு அதிகமாக 22, 23, 26 உறுப்புகளும் காணப்பெறுகின்றன. நந்திக் கலம்பகம், தில்லைக் கலம்பகம், ஆளுடைப்பிள்ளையார் திருக்கலம்பகம் முதலியவற்றில் பதினெட்டிற்கும் குறைவான உறுப்புக்களே காணப்பெறுகின்றன. திருப்பேரைக் கலம்பகத்தில் 26 உறுப்புகள் உள்ளன. இங்ஙனம் காலந்தோறும் உறுப்புகள் கூடியும் குறைந்தும் வந்துள்ளதைக் காணலாம். அப்படியே பாடல் தொகையும் வேறுபட்டு வருதலைக் காணலாம். திருவாவடு துறை அம்பலவாண தேசிகர் மீது பாடப்பட்ட கலம்பகத்தில் 100 செய்யுள்கள் உள. புள்ளிருக்கும் வேளூர்க் கலம்பகத்தில் 101 செய்யுள்கள் உள்ளன. ஸ்ரீ குமரகுருபரர் 102 செய்யுட்களை ஆக்கியுள்ளார். எனவே இவ்வரையறைகள் எங்கும் ஒரு படித்தாய் அமையவில்லை என்பது தெளிவாகின்றது.

இனிக் கலம்பகம் என்னும் பெயர்க்குக் காரணம் என்ன என்பதைப் பார்க்கலாம். பெயர்க் காரணம் பலவாறாகக் கூறப்பெறுகின்றன. 'கலவை' என்ற பொருளே பொருத்தமாகப் புலப்படுகின்றது. கதம்பம் என்ற சொல்லே, கதம்பகம், ஆகி கலம்பகம் ஆயிற்று என்று ஒரு சாரார் உரைப்பர்.

நிறம், மணம், உருவம், ஆகியவற்றால் வேறுபட்ட மலர்கள் ஒன்றக் கட்டியதைக் கதம்பம் என்போம். அப்படியே யாப்பு, சந்தம், அளவு முதலியவற்றால் வேறுபட்ட பலவகைச் செய்யுள்கள் விரவி வரல் காரணமாகக் ''கலம்பகம்'' என்றாயிற்று என்பதே பொருந்தும்.

வேறு சிலர் கலம் + பகம் எனப் பிரித்து கலம் என்றால் 12 மரக்கால். பகம் என்றால் இறைவனின் குணங்கள் 6. [ஐஸ்வர்யம், வீர்யம், புகழ், திரு, ஞானம், வைராக்யம்] இரண்டையும் கூட்டினால் 18. கலம்பகம் 18 உறுப்புக்களை கொண்டதென்பதை அச் சொல் புலப்படுத்துகின்றது எனக் கூறு கின்றார்கள். கலத்திற்கு மரக்கால் எத்தனை என்பதைப் போல படி 48 என்று கூறினால் கதி என்னாகும்? இப்படிப் பொருள் கொள் வது எல்லாம் முறையாகா தென்பதைக் கூறவேண்டுவதில்லை.

கலம்பகம் என்ற இந்த வகைப் பிரபந்தம் சுமார் கி. பி. 9-ம் நூற்றாண்டு முதலே தோன்றி வளர்ந்து வந்துள்ள தென அறி கிறோம். நமக்குக் கிடைக்கும் கலம்பகங் களில் காலத்தால் முந்தியது நந்திக் கலம் பகமே. அது தெள்ளாற்றெறிந்த மூன்றாம் நந்திவர்மன் மீது பாடப்பட்டதாகும். அவன் காலம் கி. பி. 825-850 ஆகும். இதில் உறுப்புகள் பதின்மூன்றே யுள்ளன. பாடல் தொகையோ (88 + 27) 115 ஆகும்.

மன்னர் முதலியோர் மீது பாடப்பெற்ற கலம்பகங்களை விடத் தெய்வங்களின் மீது பாடப்பெற்ற கலம்பகங்களே அதிகம். அதிலும், விஷ்ணுபரமாகப் பாடப்பெற்ற வற்றைவிடச் சிவபரமாகப் பாடப்பெற்ற வையே அதிகம்! அடியார்கள் மீது பாடப் பெற்றவை சிலவே!

''கலம்பகத்திற்கு இரட்டை யர்கள்'' என்று பாராட்டப்பெறும் இரட்டை யர்கள் பாடியவை ''தில்லைக் கலம்பகம்'', ''திருவாமாத்தூர்க் கலம்பகம்'' ஆகிய இரண்டே! ''அருணைக் கலம்பகம்'', ''புள்ளி ருக்கும் வேளூர்க் கலம்பகம்'', ''மதுரைக் கலம்பகம்'' முதலியன சிவபரமான கலம்பகங் களில் சிறந்து விளங்குவன ஆகும். பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் பாடிய ''திருவரங்கக் கலம்பகம்'', வீரராகவ முதலியார் பாடிய ''திருவேங்கடக் கலம்பகம்'' முதலியன விஷ்ணு பரமாகப் பாடிய கலம்பகங்களில் சிறந்தவை யாகும். பெஷ்கி என்னும் வீரமாமுனிவர் ''திருக்காவலூர்க் கலம்பகம்'' ஒன்றை ஆக்கி யுள்ளார். பூண்டி அரங்கநாத முதலியார் பாடிய ''கச்சிக் கலம்பகம்'' வைநாகரம் ராமநாதன் செட்டியார் பாடிய ''மயூரகிரிக் கலம்பகம்'' ஆகியவை பிற்காலக் கலம்பகங் களில் குறிப்பிடத் தக்கவை ஆகும். திருவரங்கக் கலம்பகத்தில் ''மறம்'' எங் ஙனம் சிறப்பு மிக்கதோ அங்ஙனமே குன்றக் குடி என்னும் மயூரகிரி கலம்பகத்தில் ''களி'' சிறப்புடையதாகும்.

இங்ஙனம் 9ஆம் நூற்றாண்டிலிருந்து 20ஆம் நூற்றாண்டு வரைத் தொடர்ந்து வருவதிலிருந்தே இப்பிரபந்தம் தமிழகத்தில் பெரிதும் மதிக்கப் பெற்று வந்துள்ளதை அறியலாம்.

ஸ்ரீகுமரகுருபரரின் தமிழ்ப்பற்று எப்படி எல்லாம் மதுரைக் கலம்பகத்திலும் சுடர் விட்டுப் பிரகாசிக்கின்றது என்பதை ஓரளவு காணலாம்.

ஸ்ரீகுமரகுருபரர் சிவப்பற்றைப் போலவே தமிழ்ப்பற்றும் மிக்குடையவர் என்பதை மீனாட்சி அம்மைப் பிள்ளைத் தமிழிலும், முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழிலும் கண்டு மகிழ்கிறோம். அங்ஙனமே மதுரைக் கலம்பகத்தில் அப்பெருமானார் தமிழை எப் படி எல்லாம் பாடிப் பரவித் திளைக்கின்றார் என்பதையும் காண்போம்.

காப்புச் செய்யுளிலேயே தமிழ் தலை காட்டி விடுகிறது. தொந்திக் கணபதியின் தந்தையான சிவன் மீது பாடப்பெறும் தமிழ்ப் பிரபந்தம் என்பதை

'தொந்தித் தந்திக்குத் தந்தை தமிழ்' என்கிறார்.

தமிழ்க் கூடல் தீந்தமிழின் மழலை, பசுந் தமிழ், தமிழ் மதுரை, மும்மைத்தமிழ் மதுரை, மும்மைத் தமிழ்க் கூடல், தண்டமிழ் நாடன் னீர், தலைச்சங்கம் பொங்கும் பண்முத்தமிழ் தண்டமிழ்க் கூடல், சங்கத் தமிழ்ச் சொக்கர், பைந்தமிழ் தேர் கூடல், முத்தமிழ் வெற்பு. எழுதா மறையோடும் இசை முத்தமிழ், சங்கத்தமிழ்க் கூடல், வடகலையல பல கலை யொடும் தமிழ் வளரும் கூடல், பாட்டுக் குருகும் தமிழ்ச் சொக்க நாதர், முச்சங்கம் வளர் கூடல், தெளி தமிழ்க்கூடல்

''வண்டமிழ்க் கடலின் தண்டுரைச் சங்கமும்
முத்தகம் பயின்று, காவியங் கற்றுச்
சித்திரப் பாட்டியல் தேர்ந்தன செல்லும்
தடம்பணை யுடுத்த தண்டமிழ்க் கூடல்''

''தண்டமிழ் மதுரம் கூட்டுண எழுந்த வேட் கையால் எனில் இக்கொழி தமிழ்ப் பெருமை யாரறிவார்?

''மேதகைய பலகலை போர்த்து அறம்
வளரும் தமிழ்க் கூடல்''

''வடகலை, தென்கலை பலகலையும்
பொதி
மதுரை வளம் பதியே''

''பெருவளம் சுரந்த விரிதமிழ்க் கூடல்''

என்றெல்லாம் வாய் மணக்க வண்டமிழைப் பேசி மகிழ்கின்றார்.

வளமான, நயமான, விருத்தங்களும், வெண்பாக்களும் நிரம்பிய மதுரைக் கலம் பகத்தின் பாடல்களைக் காண்போம். வளையல் விற்ற திருவிளையாடலை மனத்தில் கொண்ட ஓர் அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம் அருளுகிறார் ஸ்ரீ குமரகுருபரர்:-

வலங்கொண்ட மழுவுடையீர்! வளைகொண்டு
விற்பீர்போல் மதுரை மூதூர்க்
குலங்கொண்ட பெய்வளையார் கைவளை
பெயல்
லாங் கொள்ளை கொள்கின் றீரால்
பலங் கொண்ட செட்டுமக்குப் பலித்ததுநன்
றானீர் இப் பாவை மார்க்குப்
பொலங் கொண்ட வரிவளைகள் விற்பதற்கோ
கொள்வதற்கோ புறப்பட் டீரே?

மற்றொரு செய்யுள். அது வெண்பா. அதன் அருமையையும் கண்டு மகிழ்வோம்.

கான்தகைய செல்வக் கடம்பவனத்து
ஆனந்த
தாண்டவம் செய்து ஆண்டவர்நீர்
தாமென்றே - பூண்டடியார்
உள்ளத் திருப்பீர் எம் உள்ளத்தையும்
உமதா
மெள்ளத் திருப்பீர் மிக!

இங்ஙனம் எத்தனை எத்தனையோ அருமைப் பாடுகளை யெல்லாம் மதுரைக் கலம்பகத்தில் கண்டு மகிழலாம்,



# செய் கைம்மாறு

'குண்டலகேசி' என்றால் ஓ! அது என்றுமுள தென் தமிழின் பண்டைத் தமிழ்க் காப்பியங்களுள் ஒன்றல்லவா என்போம். ஆம்; உண்மைதான்.

இந்நூல் ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன் ஆக்கப் பெற்றது. காலதேவன் அந்நூலின் மிகப்பெரும் பகுதியை ஜீரணித்துக் கொண்டு விட்டான். ஏதோ சில செய்யுட்கள் எஞ்சியிருக்கின்றன. அந்நூலின் முதற் செய்யுளை - ஆம், காப்புச் செய்யுளை - நாம் இன்று படிப்போமானால் நம்மையறியாமலே ஆச்சர்யப்படுவோம். ''என்ன! ஆயிரமாயிரம் ஆண்டுகட்கு முன்னமேயே காந்தியடிகளின் மெய்க்கீர்த்தி பாடப்பட்டிருக்கிறதா'' என்று பேரதிசயம் கொள்ளுவோம். அது, புத்த பகவானைப் போற்றிப்பாடப் பட்டதாயினும், அப்படியே காந்தியடிகளின் தன்மையை எழுத்தோவியமாகச் சித்திரிக்கிறது. செய்யுளைப் பார்ப்போம் :-

''முன், தான் பெருமைக்கண் நின்றான்;
முடி(வு) எய்து காறும்
நன்றே நினைந்தான்; குணமே
மொழிந்தான்; தனக்(கு) என்று
ஒன்றாலும் உள்ளான்; பிறர்க்கே
உறுதிக்(கு) உழந்தான்;
அன்றே இறைவன்? அவன்தான்
சரணங்கள் அன்றே!''

(எல்லாப் பெருமைகளுக்கும் முன்னே தான் நின்றான்; தன் வாழ்நாள் முடியுமட்டும் நன்மையான வற்றையே எண்ணினான்; நற்பயன் தரத்தக்க வழிகளையே போதித்தான்; தனக்கு என்று ஒன்று கூட மனசாலும் விரும்பமாட்டான்; மற்றவர்களின் நன்மைக் கென்றே எத்தனையோ கஷ்டங்களை அனுபவித்தவனான அவன் அல்லவா எமக்குத் தெய்வம்? அவன் திருவடிகளே எமக்கு அடைக்கலம்)

இந்தச் செய்யுளை, எதில் உள்ளது என்று தெரியாமல் யாராவது படித்தால் இது காந்தியடிகளைப் பற்றிப் பாடப்பட்டது என்று தானே சொல்லத்தோன்றும்.

சரி, இவ்வளவு சிறந்த வாழ்க்கையை மகாத்மா எப்படி அமைத்துக் கொண்டார்? அவருடைய கொள்கைகளை வகுத்துக் கொள்வதற்குப் பேருதவியாக அமைந்த சாதனங்கள் எவை?

அசைவில்லாத கடவுள் நம்பிக்கை, அதற்கும் மேலான தன்னம்பிக்கை. இவைதான் அவரின் வாழ்க்கை மாளிகையின் அடிப்படை. கடவுள் சத்தியஸ்வரூபி; சத்தியமே கடவுள் என்பதை உறுதியாக நம்பினார்.

''தான் எல்லாம் வல்ல இறைவனின் திருக்கோயில். அவன் தன்னுள்ளே என்றும் நின்று நிலவுகிறான்; அவன் தங்கியிருக்கும் திருக்கோயில் என்றும் தூய்மையாயிருக்க வேண்டும்; அவன் தங்கியிருக்கும் மனம் பரிசுத்தமாக இருக்க வேண்டும்; அவனால், தான் இயக்கப்படும் உண்மை யறிந்து, தன் செய்கை எல்லாம் பவித்திரமாயிருக்க வேண்டும்'' என்பதை நன்குணர்ந்து நடந்து காட்டினார்.

தான் மட்டுமல்ல, எல்லா ஜீவனுமே அவன் உறையும் ஆலயங்கள் என்பதை உணர்ந்து தெளிந்தமையால் எவ்வுயிர்க்கும் தீங்கினை எண்ணாத தன்மையைக் கடைப்பிடித்தொழுகினார். தன்னுடம்பில் வதியும் அதே பரம்பொருள்தான் எல்லா உடல்களிலும் உறைகிறது; என்ற உண்மையை ஐயமற உணர்ந்து விட்டமையால் உற்றார் மற்றார் என்ற உணர்ச்சி எதும் கொள்ளாமல்

யாரிடத்தும் பகைமை பாராட்டாமல் வாழ்ந்தார். எனவே தான் இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தல் என்ற அறநெறியைக் கடைப்பிடித்தொழுகினார். இவற்றையே சத்தியம், அஹிம்ஸை என்ற இருபெரும் கொள்கையாகவும் அமைத்துக் கொண்டார்.

தம்முடைய வாழ்க்கைக்கு வழிகாட்டியாக இருளுலகில் தம் வாழ்க்கைப் பிரயாணத்திற்கு அருள் விளக்காகக் கீதையையே கைக்கொண்டார். சுருக்கமாகக் கூறினால், கீதை இலக்கணம்; காந்தி இலக்கியம்; ஐம்பது ஆண்டுகட்கு மேலாகத் தமது வாழ்க்கையைக் கீதை என்னும் ரசாயன சாலையிலே கிடத்திச் சோதனை செய்திருக்கிறார். கீதைக்குச் சங்கரர், ராமானுஜர், மாத்வர், நீலகண்டர், விவேகானந்தர், திலகர், அன்னிபெஸண்ட், பாரதியார் முதலியோர் சிறந்த உரைகள் ஆக்கியிருக்கிறார்கள். ஆனால் காந்தியடிகளைப் போல யாரும் உரைசெய்ய இல்லை. ஏனென்றால் கீதை தனி மனிதனுக்கும், சமுதாயத்திற்கும், அரசியலுக்கும் ஒத்த ஒரு பெருநூல் - வழிகாட்டி என்பதை விளக்கி நூல் இயற்றியதுடனன்றி, அவ்வழியிலேயே நடந்தும் காட்டிய பெருமை இதுவரை உலகிலேயே காந்தியடிகட்குத் தான் உரியது. கீதையில் காண்பது எல்லாம் யதார்த்தம் (Fact) அல்ல என்பதையும் அவ்வளவும் உண்மை (Truth) என்பதையும் அழுத்தமாகச் சொல்லியவரும் காந்தியடிகளே. அவர் எழுதிய "அனாசக்தி யோகம்" என்ற நூலைப் படிப்பவர்கள் அதன் முகவுரையிலேயே இந்த உண்மைகள் அழுத்தமாக வலியுறுத்தப்படுவதை அறியலாம். ஒவ்வொரு நாளும் கீதை பாராயணம் செய்வது அவர் வழக்கம். ஒவ்வொரு பொழுதும் பிரார்த்தனையில் கீதையில் 2ம் அத்தியாயத்தில் 54 முதல் 72 வரை உள்ள 19 சூத்திரங்களும் ஓதப்பெறும். கீதையிலேயே காந்தியடிகளுக்கு மிகவும் ஈடுபாடுள்ள பகுதி அது. அதில்தான் கண்ணனை நோக்கிப் பார்த்தன், முழுநிலையறிவினன் தோற்றமும் சொல்லும், செயலும் அடைவும் என்ன? எனக் கேட்கிறான். கண்ணன் அவற்றிற்குத் தக்க பதில் உரைக்கிறான். இப்பகுதியை ஒவ்வொரு மனிதனும் அன்றாடப் பிரார்த்தனையில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்பது காந்தியடிகளின் விருப்பம். இன்னும் காந்தியத் தொண்டர்கள் இதை அனுஷ்டித்து வருவதையும் சிறைக்கூடத்தில் எல்லாக் காங்கிரஸ்காரர்களும் பின்பற்றுவதையும் நன்குணரலாம்.

கீதையுடன் உபநிஷதங்களின் மகோந்நதக் கருத்துக்கள், காந்தியடிகளின் உள்ளத்தை மிகவும் ஈர்த்தன. உபநிஷிதங்களிலும் ஈஸாவாஸ்யோப நிஷதத்தின் முதல் மூன்று சூத்திரம் காந்தியடிகளுக்கு மிகவும் பிரியமானவை. அதைப்போலவே ரஸ்கின் என்னும் மேலைநாட்டறிஞரின் "Lead Kindly Light" என்ற பாடலும் காந்தியடிகளுக்கு மிகவும் பிரியமானது. அந்த நான்கையும் எளியேன் மொழி பெயர்த்துள்ளதைக் கீழே தருகிறேன், மற்றையோருக்கும் பயன்படும் என்ற நம்பிக்கையோடு! அந்தக் கருத்தை மனத்தில் பதித்து வாழ்க்கையில் கடைப்பிடிப்போமானால் அது தான் நமக்காக வாழ்ந்து நம்மையெல்லாம் மனிதர்களாக ஆக்கி நம் வாழ்வுக்காகவே தம்மைப்பலி கொடுத்த அமரன் காந்தியடிகளுக்கு நாம் செய்யும் உண்மையான கைம்மாறு ஆகும்!

(1) இவ்வுலகில் எப்பொருளும் ஈசன்உறை
கோயில் எனும்
அவ்வுண்மை தன்னை அறிந்துநிதம்—
செவ்வே
துறவு மனம் கொண்டின்பம் துய்ப்போம்,
உளத்தும்
பிறர்பொருளைத் தீண்டிடோம் பின்

(2) தன்கடமை செய்தே தரணிதனில்
நூறாண்டும்
இன்பமுடை வாழ்வுபெற எண்ணிடுக! —
மன்னும்
வழி இதுவே! வேறே வழியிலை!
ஈதொன்றே
பழியில் பயன்தருவ தாம்.

பழந்தமிழர்கள் ஒரு வருஷ காலத்தை ஆவணி தொடங்கி ஆடி முடிய இரண்டிரண்டு மாதங்கள் கொண்ட ஆறு பருவ காலங்களாக வகுத்திருக்கிருர்கள். அவை முறையே கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முது வேனில் என்பனவாகும். அதைப்போலவே, ஒரு தினத்தையும், பிற்பகல் ஆறுமணி முதல் தொடங்கி நன்னான்கு மணிநேரங் கொண்ட ஆறுபிரிவுகளாக வகுத்திருக்கிறார்கள். ஒரு வருஷ காலத்தை ''பெரும்பொழுது''. என்றும் ஒரு தினத்தை 'சிறுபொழுது' என்றும் சொல்வது அக்காலத்து வழக்கம்.

சிறுபொழுதை மாலை, யாமம், விடியல் அல்லது வைகறை, காலை, நண்பகல், எற்பாடு என ஆறு கூறாகப் பகுத்திருக்கிறார்கள். சிறுபொழுதின் ஆறுபகுதிகளுள் இரண்டாம் பகுதியாகிய யாமத்தையும், யாமத்தில் நிகழும் நிகழ்ச்சிகளையும் தமிழ்ப் பெரும் புலவர்கள் வழியாகச் சென்று காணலாம். யாமம் என்பது இரவு 10 மணி முதல் 2 மணி வரை உள்ள காலமாகும்.

> ''காரும் மாலையும் முல்லை; குறிஞ்சி
> கூதிர் யாமம் என்மனார் புலவர்.''

என்பது தொல்காப்பியப் பொருளதிகார அகத் திணையியல் ஆறாவது சூத்திரமாகும். இச்சூத்திரத்தில் ''குறிஞ்சி கூதிர் யாமம்'' என்பதற்கு ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க் கினியர் செய்த உரையைச் சிறிது பார்க்கலாம்.

''குறிஞ்சியாவது புணர்தற் பொருட்டு. அஃது இயற்கைப் புணர்ச்சி முதலியனவாம். இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தபின் களவு நீட்டிப்பக் கருதுந்தலைவற்குக் களவினைச் சிறப்பிக்குங்கால் தலைவி அரியளாக வேண்டும். ஆகவே அவ்அருமையை ஆக்குவது ஐப்பசியும் கார்த்திகையுமாகிய கூதிரும், அதன் இடையாமமும் என்பது. என்னை? இருள் தூங்கி துளிமிகுதலில் சேறல் அரிதாதலானும், பானாட்கங்குலில் பரந்துடன் வழங்காது மாவும், புள்ளும் துணையுடன் இன்புற்று வதிதலில், காமக்குறிப்பு கழியவே பெருகுதலானும், காவல் மிகுதிநோக்காது வருந்தலைவனைக் குறிக்கண் எதிர்ப்பட்டுப் புணருங்கால் இன்பம் பெருகுதலின், குறிஞ்சி நிலத்திற்குக் கூதிரும் யாமமும் சிறந்தன.

யாமத்தில் இருள் மிகுந்து குளிர்நிறைந் திருப்பதாலும், விலங்கினங்களும் பட்சி ஜாதி களும், ஜோடிஜோடியாகக் களிப்போடு கூடி யிருப்பதாலும், காதல் வேட்கையானது மிக மிக வளர்வதற்கு ஏதுவாக இருக்கிறது.''

பழந்தமிழ் நூல்களுள் யாமத்து நிகழ்ச்சிகள் பேசப்படுவதைக் காணலாம். அவை என்ன? தலைவனும் தலைவியும் இரவில் குறிப்பிட்ட இடத்தில் சந்திப்பதாகத் தீர்மானித்தல்; அவ்விடத்திற்குத் தலைவன் வருதல்; அவன் வரவையறிந்த தோழி தலைவியை அவனிடத்திற்குக் கொண்டு சேர்த்தல்; இரவில் அவன் வரும் வழியில் நேரிடும் கஷ்டங்களை நினைத்துத் தலைவி அவனை இரவில் வாராதிருக்க வேண்டுதல்; தலைவன் தலைவியைத் தேற்றிக் கூடிமகிழ்ந்து செல்லுதல்; பின்னர் தோழி, தலைவியை மீண்டும் வீட்டிற்கு அழைத்துச் செல்லல் முதலியனவாகும். இந்தக் குறியிடத்தில் காதலர் சந்திப்பதற்குப் பலவித இடையூறுகள் ஏற்படுவதும் உண்டு.

அவை ஊரும், தாயும் உறங்காமை; காவலர் சுற்றித்திரிதல்; நாய் குரைத்தல்; நிலவு எரித்தல்; ஆந்தை அலறுதல்; கோழிகூவுதல், என, நம்பி அகப்பொருளில் காணப்படுகின்றன. அதை அகநானூற்றிலே பரணர் என்னும் புலவர் எப்படி சித்திரிக் கிறார் என்று பார்க்கலாம்.

தான் வசிக்கும் அந்தப் பேரூரில் திரு விழா ஒன்றும் இல்லாத பொழுதும்கூட ஊரடங்கி விட்டதென்றாலும் மகாக் கெடு பிடிக்காரியாகிய, தாய் உறங்கித் தொலை கிறாளில்லை. ஊரடங்கி அன்னையும் உறங்கி விட்டாலும் ஊர்க்காவலர் அயராது ஆர்ப்பாட்டம் செய்கிறார்கள்.

''சேமம் புகினும் யாமத்துறங்கு'' என்ற கட்டளைக்கேற்ப, காவலர் தமது கடமையை மறந்து உறங்கிப் போய்விட்டாலும் பாழும் நாய்கள் குரைப்பதை நிறுத்துவதில்லை. நாய் அயர்ந்தாலும் பாவி சந்திரன் கள வொழுக்கத்திற்கு இடையூறாக வெளிச்சம் போடுகிறான். சந்திரன் மறைந்து விட்டாலும் இந்த அலறுவாய்க் கோட்டான் ஓயாமல் கத்துகிறது; அதிர்ஷ்ட வசமாக இத்தகைய இடையூறுகளெல்லாம் ஒழிந்து சர்வானு கூலமாக இருக்கிற பொழுதிலே என் னுள்ளத்தைச் சூறையாடிய அவர் - ஆம்- அவர் வராமலே இருந்து விடுகிறார் என்று வருந்துகிறாள் தலைவி. இனிப் பாட்டைப் பார்க்கலாம்.

''இரும்பிழி மகாஅர் இவ் அழுங்கல் மூதூர்
விழவு இன்று ஆயினும் துஞ்சா தாகும்;
மல்லல் ஆவணம் மறுகுடன் மடியின்,
வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்;
பிணிகோள் அருஞ்சிறை அன்னை துஞ்சில்,
துஞ்சாக் கண்ணர் காவல் கடுகுவர்;
இலங்குவேல் இளையர் துஞ்சின், வை எயிற்று
வலஞ் சுரித் தோகை ஞாளி மகிழும்;
அரவ-வாய் ஞமலி மகிழாது மடியில்,
பகல் உரு உறழ நிலவுக்கான்று விசும்பின்
அகல்வாய் மண்டிலம் நின்று விரியும்மே;
திங்கள் கல்சேர்பு, கனையிருள் மடியின்,
இல் எலி வல்சி வல்வாய்க் கூகை
கழுது வழங்கு யாமத்து அழிதகக் குழறும்;
வலைக்கண் சேவல் வாழாது மடியின்
மனைச் செறி கோழி மாண்குரல் இயம்பும்;
எல்லாம் மடிந்த காலை ஒருநாள்
நில்லா-நெஞ்சத்தவர் வாரலரே.''

இப்படி ஒரு தலைவியின் ஏக்கத்தை இந்த யாமத்திலே உணருகிறோம். மற்றொரு தலைவியின் மனப்போக்கைக் கபிலர் மூல மாகக் காண்போமா? சரி;

'என் அருமைத்தோழி! கடலினும் பெரிய தாய் அமைந்த காதல் வெள்ளத்திலே அமிழ்ந்த என் தலைவன் இந்தக் 'கரும்-கும்' இருட்டிலே, அடர்ந்த காட்டு வழியிலே, கல்லும் முள்ளும் நிறைந்த ஒற்றையடிப் பாதையிலே மழை பெய்து கொண்டேயிருக்க, நீர்தங்கிய பள்ளம் படுகுழிகளை எல்லாம் தாண்டி என்னை நாடிவரும் அவர் திருவடிகள் கல்லாலும் முள்ளாலும் வருந்துமே யென நைந்த எனது நெஞ்சம் என்னையும் கூடக் கலவாது, அவர் அடிதாங்கித் துயர்களையச் சென்றது' என்று தலைவி தனது தோழிக்குச் சொல்லுகிறாளாம். அந்தப்பாட்டைப் பார்க் கலாம்.

மன்னுபா டவிந்து மனைமடித் தன்றே
கொன்றோர் அன்ன கொடுமையோ டின்றே,
யாமம் கொள்வரில் கனைஇக் காமம்
கடலினும் உரைஇக் கரைபொழி யும்மே;
எவன்கொல், வாழிதோழி, மயங்கி
இன்ன மாகவும் நன்னர் நெஞ்சம்
என்னொடும் நின்னொடும் சூழாது, கைம்மிக்கு
இறும்புபட்டு இருளிய விட்டரும் சிலம்பில்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடி
கான நாடன் வரூஉம், யானை
கயிற்றுப்புறத் தன்ன கல்மிசைச் சிறுநெறி
மாரி வானந் தலைஇ நீர் வார்பு
இட்டரும் கண்ண படுகுழியியவின்
இருளிடை மதிப்புழி நோக்கி அவர்
தளரடி தாங்கிய, சென்றது இன்றே!

இனிக் கவிச் சக்கரவர்த்தி கம்பன் நமக்கு யாமத்திலே காட்டுகிற காட்சிகளில் ஒன்றிரண்டைச் சிறிது பார்த்து அனுபவிக்கலாம்.

இராமன், தம்பி இலக்குவனுடனும் விசுவாமித்திரருடனும் மிதிலாபுரி இராச வீதியிலே செல்கிறான். கன்னிமாடத்து உபரிகையிலே நிற்கிற சீதையைப் பார்க்கிறான்; சீதையும் இராமனைக் காணுகிறாள். கேட்க வேண்டுமா அப்புறம்? ஒருவரையொருவர் உள்ளம் ஈர்த்தலால் இருவரும் மாறிப்புக்கு இதயம் ஒன்றாகி விடுகிறார்கள். இந்த நிலையில் வந்த யாமம் சீதைக்கும் இராமனுக்கும் எப்படிப்பட்டதாய் இருந்தது? முதலில் சீதையைச் சென்று பார்ப்போம்.

அந்திமாலையிலே வீதிவழிச் சென்ற இராமன் சீதையின் கண் பார்வையில் மறைந்து விடுகிறான். கண்வழிப் புகுந்த கள்வனாகிய இராமன் சீதையின் உள்ளத்தையும் அழகையும், கற்பையும் எல்லாவற்றையும் கவர்ந்து சென்று விடுகிறான். கண் வழியாகப் புகுந்த காதல் நோயானது குடத்துப்பாலில் துளி பிரைமோர் விழுந்தது போல் சீதையின் உடல் முழுதும் வியாபித்து விடுகிறது. அந்திமாலை மறைய, யாமம் ஆட்சி செலுத்தத் தொடங்குகிறது. சீதை காதல் கணைக்குப் பலியாகி விடுகிறாள். இந்த இருட்டை — ஆம் — யாமத்தைப்பற்றி எப்படியெல்லாம் எண்ணுகிறாள் சீதை.

''உலகமெல்லாம் விஷம் பரந்து விட்டதா? அல்லது நாற்புறத்தும் உள்ள சமுத்திரங்கள் உலகத்தையே பொத்திக் கொண்டு விட்டனவா? அல்லது தெரு வழியே சென்றாரே அவர் — அவருடைய நீல வருணத்தை என்னைப் போலவே எல்லோரும் சிந்தித்துக் கொண்டேயிருக்க, அந்த நிறமே உலகத்தைக் கவிந்து கொண்டு விட்டதா? அல்லது யமனுடைய நிறத்தை மையிலே கலந்து குழைத்து ஆகாயத்திலும் பூமியிலும் அப்பப் பட்டிருக்கின்றதா? ஒன்றுமில்லாதுவிடுமா இந்த யாமம் இப்படி ஒரே அந்தகாரமாக இருப்பதற்குக் காரணந்தான் என்ன? என்று மயங்குகிறாள் சீதை. இதைக் கம்பன் பேசுவதைக் கேளுங்கள்.



''ஆலம் உலகில் பரந்ததுவோ; ஆழிகிளர்ந்ததோ; அவர்தம்
நீலநிறத்தை எல்லாரும் நினைக்க அது வாய் நிரம்பியதோ;
காலன் நிறத்தை அஞ்சனத்திற் கலந்து குழைத்துக் காயத்தின்
மேலும், நிலத்தும் மெழுகியதோ; விளைக்கும் இருளாய் விளைந்ததுவே.''

இதே யாமத்தில் இராமனின் நிலை என்ன என்பதையும் கொஞ்சம் பார்க்கலாம். சீதைபால் சிந்தையை விடுத்து வெறும் கூடாகத் தம்பியோடும் தவமுனியோடும் சென்ற இராமன் காதல் தீயினால் தகிக்கப் பட்டு ஜனக மன்னனது அரண்மனையை அடைகிறான். அரண்மனையிலே சகலவித உபசார்ங்களும் நடக்கின்றன. சாப்பாடெல்லாம் முடிந்த பிறகு படுக்கை போடப்படுகிறது. விசுவாமித்திரனும், இலக்குவனும் அவர்களுக்கேற்ற படுக்கையை அடைந்த பிறகு, சீதையே சிந்தையெலாம் நிறைந்திருக்க மற்றோர்பால் சென்று படுக்கிறான். அன்று தான் இராமன் காதலால் தாக்கப் படுகிறான். படுத்ததும் யாமம் வந்துவிடுகிறது. பொழுது விடியாதா, ''இந்தப் பொல்லா நோய் தீராதா'' என்று வருந்துகிறான். இந்த வேளையில் சந்திரனும் உதித்து விடுகிறான். கூட யாராவது இருக்கப்படாதா அல்லது தானாவது தம்பியொடும் முனிவரொடும் பக்கத்திலே சென்று படுத்திருக்கக் கூடாதா என்ற ஒரு புழுக்கம் இராமனுக்கு. ஆனால் இராமன் தனியாக இருக்கவில்லை என்கிறான் கம்பன். இராமன் ஐந்து துணைகளோடு அகலாதிருக்கிறான் என்று சித்தாந்தம் செய்தும் விடுகிறான். கம்பன் கூறும் ஐந்து துணைகள் யாவை?

* நெருப்பெனத் தகிக்கும் காரிருள்
* அந்தக் கரு நெருப்பின் இடையே எழுந்த வெண்ணெருப்பைப் போலப் பொசுக்கும் சந்திரன்
* உடன் யாருமில்லாத தனிமை
* தன்னைப் பற்றியே எண்ணிக் கொண் டிருக்கும் உணர்வழிந்த தன்மை.
* ஐந்தாவதாக, சிந்தையில் பிரியாத அவள்.

இந்த ஐந்து துணைகளுடனும் கூடியே இராமன் இருக்கிறானென்று கம்பன் நயம் படச் சொல்கிறான். சரி; பாட்டைப் பார்க்க லாம்.

''முனியும், தம்பியும், மொய்ம்முறையால் தமக்கு
இனிய பள்ளிகள் எய்தியபின் இருள்க் —
கனியும் போல்பவன், கங்குலும்; திங்களும்
தனியும் தானும் அத் தையலும்
ஆயினான்.''

கம்பன், இராமனுக்குத் 'தான்' என்னும் எண்ணத்தையே துணையாக ஆக்கிய சிறப்பை வள்ளுவனும் கூறக்காணலாம்.

''காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே உளேன்''
என்பதனாலும்,

''மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்திரா
என்னல்லது இல்லை துணை''

என்பதனாலும் தனக்குத்தானே - அதாவது, தான் என்ற உணர்வே துணை என்பதை விளங்க வைக்கிறான். மற்றொரு காட்சி :-

யாமத்திலே ஒரு தலைவி, தலைவனைப் பற்றிய சிந்தனையிலே மூழ்கித் தன்னையும் மறந்து கொஞ்சம் கண்மூடி விடுகிறாள். கண் பொருதிய அந்தச் சிறுபொழுதிலே தலைவன் வந்து தன் கரம் தொட்டிழுப் பதைக் காணுகிறாள். உடல் சிலிர்த்து உளம் களித்து உவகை பொங்கக் காதலனைத் தழுவ எண்ணி எழுந்து விடுகிறாள். எல்லாம் கனவு நிகழ்ச்சி என்பதை உணரு கிறாள். ''ஐயோ! ஏன் விழித்தேன். நன விலே அடைய முடியாத பாவி நான் கனவிலா வது அவரைக் கூடிக்களித்திருக்க மாட்டாது கண் விழித்து விட்டேனே-'' என்று ஏங்கு கிறாள். இந்தப் பாவம் முத்தொள்ளாயிரத்தில் பாவாக மலர்கிறது.

''ஓராற்றான் என்கண் இமைபொருந்த
அந்நிலையே
கூரார்வேல் மாறன்என் கைப்பற்ற—வாரா
மாடல் நனவென்று எழுந்திருந்தேன்
நல்வினை ஒன்றில்லேன்
கனவும் இழந்திருத்த வாறு.''

ஒரு நாள் ஒப்பிலாமணிப் புலவர் யாமத்திலே ஒரு வீதியிலே செல்கிறார். ஒரு தலைவியும், தோழியும் உப்பரிகையிலே வீற்றிருக்கக் காணுகிறார். தலைவி தோழியிடம் ஏதோ பேசுகிறாள். அவள் பேச்சு ஏக்கம் நிறைந்ததாக இருக்கிறது. என்ன சொல்கிறாள் என்று ஒற்றுக் கேட்கிறார் புலவர். தலைவி என்ன சொல்கிறாள்? ''கடல் கதறுவதை நிறுத்த மாட்டாதா? அது தான் போகட்டும். நான் வளர்த்த இந்தச் சேவலின் வாயுமா மண் ணடைத்துப் போய்விட்டது. அல்லது இந்த இரவு ஊழிக்காலமாகவே மாறி விட்டதா என்ன? அல்லது அந்தச் சூரியன் தான் தன் னுடைய தேரோடு பாதாளத்திற்குள்ளே உருண்டு விழுந்து விட்டானா? இல்லாவிட் டால் ஏன் இன்னும் பொழுது விடியவில்லை!

ஒருக்கால் சூரியனை இராகு கேதுக்கள் விழுங்கி விட்டனவா? இல்லையென்றால் சூரியனுடைய இரதத்தின் அச்சுமரம் முறிந்து போய் குதிரைகளும் கடிவாளத்தை அறுத்துக் கொண்டு கிளம்பிவிட்டனவா? இல்லையேல் சூரியன் செத்துத்தான் போய் விட்டானா? அதெல்லாம் இல்லையென்றால் நம்மூர்ப் பக்கமே திரும்பாமல் வேறு பக்கமாக வழி

மாறிச் சென்று விட்டானா? தோழியே! எப்பொழுதுதான் என்னை வாட்டுகிற இந்த இரவு தொலைந்து நிலம் தெளியும்?

ஏக்கத்திலே கலந்து வரும் தலைவியின் இந்த ஆற்றாமைச் சொற்கள் புலவரின் மனத்திலே பதிந்து விடுகின்றன. அவை இரண்டு பாட்டாகப் பரிணமித்தும் விடுகின்றன. ஒப்பிலாமணிப் புலவரின் அந்தப் பாட்டுகளைக் கேட்போம்.

''ஆழிவாய்ச் சத்தம் அடங்காதோ;! யான் வளர்த்த
கோழிவாய் வன்தூறு கொண்டதோ! ஊழி
திரண்டதோ, கங்குல்! தினகரனும் தேரும்
உருண்டதோ பாதாளத் துள்!''

''அரவம் கரந்ததோ! அச்சுமரம் இற்று
புரவி கயிறுருவிப் போச்சோ! இரவிதான்
செத்தானோ! வேறு வழிச் சென்றானோ! பாங்கி எனக்கு
எத்தால் விடியும் இரா.''

இனி இந்த இரவானது உடனுறையும் காதலர்க்கும் பிரிந்த காதலர்க்கும் எப்படி அமைகின்றது என்பதைப் பார்க்கலாம்.

காதலரைக் கட்டித் தழுவிக் கொண்டிராதவர்கள் பாழும் இந்த இரவு தொலைந்து பொழுது விடியாதா என்று இருப்பார்களாம். ஆனால் காதலரைத் தழுவிக் களித்திருப்பவர்கள், ''இன்பம் பெருக்கும் இரவே, நீ நீண்டு நிற்க மாட்டாயோ'' என்று வேண்டி நிற்பாராம். இதைக் கூறும் முத்தொள்ளாயிரச் செய்யுளைப் பார்க்கலாம்.

''புல்லாதார் வல்லே புலர்கென்பர், புல்லினார்
நில்லா இரவே நெடிதென்பார்-நல்ல
விராமலர்த் தார்மாறன் வெண்சாந் தகலம்
இரா வளிப் பட்டது இது.''

இந்த யாமத்திற்குத் தான் எவ்வளவு கஷ்டம் பார்த்தீர்களா? யார் சொல்வதை கேட்பது? யார் சொல்வதை மறுப்பது? போகட்டும்.

யாமத்திலே காதல் நிகழ்ச்சிகள் மட்டுந் தானா நடைபெறும். இல்லை. வேறு எத்தனையோ நிகழ்ச்சிகள் நடைபெறுவதைக் காவியத்திலும், வாழ்க்கையிலும் காணுகிறோம்.

இலங்கை வெற்பில் சிறையிருக்கும் செல்வியாகிய சீதாப்பிராட்டியைத் தேடச் சென்ற அனுமன், இந்த யாமத்தின் அந்தகாரத்தைத் தன் பணிக்கேற்ற சிறந்த சாதனமாகக் கருதுகிறான். இரக்கம் என்பது இல்லா உள்ளத்தவரான அரக்கர் யாவரையும் உறக்கத்தில் ஆழ்த்தி, அனுமன் வேலைக்குப் பேருதவி புரிகிற இந்த யாமத்திற்கு அனுமன் எவ்வளவு நன்றி செலுத்த வேண்டியவனாகின்றான்.

''கரியநாழிகை பாதியில் காலனும்
வெருவிஒடும் அரக்கர்தம் வெம்பதி
ஒருவனே ஒரு பன்னிரு யோசனை
தெருவும் மும்மை நூறாயிரம் தேடினான்.''

இப்படிக் காரிருள் மண்டிய பேரிரவு அமையாவிட்டால் காலனும் கண்டு அஞ்சி ஓடக் கூடிய கொடியவர்களான அரக்கர் பட்டினத்திலே அனுமன் இவ்வளவு நீண்ட ஏராளமான தெருக்களிலெல்லாம் ஊசலாடி உளவு காண முடிந்திருக்குமா?

நாட்டைத் தோற்றுவிட்ட நளன், காட்டிலே ஓர் ஆடையையே தானும் தன் மனைவியுமாகப் புனைந்து கொண்டு உறங்குகிறான் அல்லவா? அப்பொழுது நட்ட நடுச் சாமத்திலே விழித்துக் கொள்கிறான். எங்கும் நிசப்தம் நிலவக் காண்கிறான்.

''தீயவனமும் துயின்று, திசை துயின்று
பேயும் துயின்றதால் (இது) பேர் யாமம்''

என்று உணருகிறான். அந்த நேரத்திலே நளமகாராஜனுக்கு என்ன எண்ணம் உண்டாகிறது? தமயந்தி நன்றாய் உறங்குகிறாள்; இது தான் அவளைப் பிரிவதற்கு ஏற்ற பொழுது என்று கருதுகிறான்.

''காரிகைதன் வெந்துயரம் காணாமல் நீத்து
அந்தக்
கூரிருளில் போவான் குதித்தெழுந்து-நேரே
இருவர்க்கும் ஓர் உயிர்போல் எய்தியதோர்
ஆடை
அறிதற் கவனிணைந்தாள் ஆங்கு.''

பேரரசன் மதலையாய்த் தோன்றிச் சுக போகத்திலே ஆழ்த்தப் பட்டிருந்த சித்தார்த்தன் துறவு பூண்டு, புத்தர் பிரானாகி, உலகெல்லாம் கருணை வெள்ளத்தைப் பரப்ப உதவியாயிருந்தது எது? இந்தச் சிறுபொழுதிலே பேசப்பட்ட யாமந்தான்.



---



---

புது மலர். தினந் தினம் மலருவது புது மலர். மல்லிகைக் கொடியில் நாள் தோறும் மலர் பூத்துக் கொண்டுதான் இருக்கிறது. ஒருவகையில் அதை புது மலர் எனலாம் தான். தமிழ்நாடு தோன்றிய காலத்தி லிருந்தே மல்லிகை, முல்லை, தாமரை முதலிய மலர்கள் மலர்ந்து கொண்டேதான் வருகின்றன. அவை தினந் தினம் மலரும் புது மலரேயானாலும் நமக்கு நெடுங்காலமாக அறிமுகமான பழைய மலர்தான் இல்லையா? ஆனால் மிகச் சமீப காலத்திலே தமிழ் நாட்டை ரோஜா மலர் முற்றுகையிட லாயிற்று. அதன் பிறகு எத்துணையோ மலர்கள் தமிழ்நாட்டிற்கு அறிமுகமாயின. கனகாம்பரம், நீலாம்பரம், டிஸம்பர் மலர், இரவு அரசி முதலிய பல வகை மலர்கள் புதிது புதிதாக வந்து புகுந்தன. நமக்கு அவைகள் உண்மையிலேயே புது மலர்கள் தான் என்பதில் என்ன ஆட்சேபம் இருக்க முடியும்? இப்பொழுது தாவர இனத்திலே மலர்ந்த புது மலர்களைப் பற்றி சிந்திக்கப் போவதில்லை. ஆனால், இலக்கியப் பூங்கா விலே மலர்ந்து மணம் பரப்பும் புதிய வாடா மலர்களைப் பற்றியே சிந்திக்கப் போகிறோம்.

தமிழர் பண்பாடு குறிப்பிடத் தகுந்த தனிச் சிறப்புடையது. உலகத்தில் எத்தனை யோ பண்பாடுகள் தனிச் சிறப்புடையன வாகக் கருதப்படுகின்றன. உதாரணமாக, கிரேக்கர் பண்பாடு, ரோமானியர் பண்பாடு, சீனர் பண்பாடு, ஆரியர் பண்பாடு போன்ற பண்பாடுகள் தலை சிறந்தவை. அப்பண்பாடு களுக்கு ஈடுகொடுக்கும் தரமுடையது நமது பண்பாடாகிய தமிழர் பண்பாடு.

தனிச் சிறப்புடைய தமிழர் பண்பாட்டு டன், அதாவது, நமது பண்பாட்டுடன் கால தேச வர்த்தமானத்தின் காரணமாக சில பண்பாடுகள் வந்து கலக்க நேரிட்டது. அத்தகைய கலப்பால் நேர்ந்த விளைவுகள் பலதரப்பட்டனவாகும். ஆரியர் பண்பாடு நமது பண்பாட்டுடன் கலந்தது. அதன் பயனாக, நமது சமுதாயம், சமயம், இலக்கியம் போன்ற துறைகளில் பெருத்த அளவு மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. பின்னர் முகம் மதியர் பண்பாடு நமது பண்பாட்டுடன் கலந்தது. என்றாலும், முன்னையதைப் போன்று பல துறைகளிலும் புகுந்து கொள்ளும் தன்மை அதற்கில்லை. அப்பால் ஐரோப்பிய பண்பாடு நமது பண்பாட்டுடன் கலக்க நேர்ந்தது. அது நமது ஆத்மார்த்திகத் துறையில் ஆழமாக வேரோட்ட முடியா விட்டாலும் சமுதாயம், இலக்கியம், அரசியல் முதலிய துறைகளில் அதன் விளைவு மிகப் பெரிது என்றுதான் சொல்லவேண்டும். வாழ்க்கைப் பரப்பு முழுவதையும் அது ஓரளவு பாதித்துள்ளது என்று சொல்லுவது எவ் விதத்தும் மிகையாகாது. விஞ்ஞான வீரியம் நிறைந்த பண்பாடு ஆதலினாலும், ஆட்சி பீடத்திலிருந்து வெளிப்பட்ட காரணத்தினா லும் எளிதாக அது மக்களுடைய உள்ளத்தை ஈர்க்கும் ஆற்றலை பெற்றிருந்ததில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. அப்பண் பாட்டின் பயனாக நமது நம்பிக்கைகளுள் சில மறைந்துள்ளன; சில மங்கியுள்ளன; இன்னும் சில திரிந்து உள்ளன. போதாக் குறைக்கு தீய கோட்பாடுகள் சிலவும் நுழைந்து கொண்டு விட்டன. நமது சிந்தை யும், நோக்கும், செயலும் இந்த நம்பிக்கை களின் ஆதிக்கத்திற்கு உட்பட்டவைகள். ஆகவே, அவற்றின் போக்கிலும், அதாவது, எண்ணத்திலும், ஒன்றை அணுகும் முறை யிலும் பெருத்த மாற்றங்கள் ஏற்பட்டுவிட்டன.

பொதுவாக, மாற்றங்கள் பல துறை களிலும் புகுந்துள்ளன எனினும், சில இலக்கியத் துறையிலும், அதனினும் சிறப் பாகக் கவிதைத் துறையிலும் எத்தகைய மாற்றம் புகுந்துள்ளன என்பதைத்தான் நாம் இப்பொழுது சிறிது பார்க்கவேண்டும்.

வசன இலக்கியம் நம்மிடம் குறிப்பிடத் தக்கபடி வளர்ந்திருக்க இல்லை. மேல் நாட்டார் வசனத் துறையில் அபாரமாக முன்னேறியிருக்கிறார்கள். முழுக்க முழுக்க இலக்கிய மணம் கமழும் வசன நூல்கள் அங்கு மல்கிப் பெருகிக் கிடக்கின்றன. அவற்றோடு நாம் போட்டி போட முடியாது என்பது மட்டுமல்ல, நெருங்கவும் முடியாதவர்கள் என்பதை ஒப்புக்கொண்டு தான் ஆக வேண்டும். அதற்குக் காரணம் பலப் பல சொல்லப் பெறலாம். அவற்றைப் பற்றியெல்லாம் முடிவு கட்ட வேண்டிய பொறுப்பு இப்போது நமக்கு இல்லை. ஆனால், அச்சு, காகிதம் முதலிய இலக்கிய வளர்ச்சிக்குப் பேருபகாரமான சாதனங்கள் தோன்றிய காலத்தில் நாமும், நமது நாடும் அடிமைப்பட்டுக் கிடந்த காரணத்தினாலே தான் எழுச்சியும், உணர்ச்சியும் தூண்ட வசன இலக்கிய ஆக்கத்தில் கருத்துச் செலுத்த முடியாதவர்களாகப் போனோம். என்றாலும் நமது நாட்டிலே சுதந்திர உணர்ச்சி தலை தூக்கத் தொடங்கியதும் வசன இலக்கியத்தின் இன்றியமையாமையை நாம் நன்கு உணரத் தொடங்கினோம். நமது எண்ணத்திற்கு மேலை நாட்டு இலக்கியங்கள் பேரளவுக்குத் தூண்டுதலாக இருந்தன. சிறுகதை இலக்கியத்திலே தமிழ் நாடு நல்லபடியாக வளர்ந்திருக்கிறது. வ.வே.சு. ஐயர், கு.ப.ரா. புதுமைப்பித்தன், பி.எஸ். ராமையா போன்ற சிறுகதை எழுத்தாளர்கள் தமிழ் வசனத்திற்கு குறிப்பிடத் தகுந்த சேவை செய்தவர்கள். அவர்களுடைய நோக்கிலும், போக்கிலும் டால்ஸ்டாய், செகால், மாபஸான் முதலிய மேற்கத்திய ஆசிரியர்களின் பாணி பிரதிபலிக்கிறது. வசன எழுச்சிக்கு மேற்கத்தியாரின் வசன நூல்கள் தான் காரணம் என்பது இல்லை. வேறு காரணங்களும் உண்டு. அவைகளைப் பற்றியெல்லாம் அதிகம் பேச வேண்டாம். கவிதைத் துறையைப்பற்றியே நாம் இங்கு சிறப்பாகப் பார்க்கலாம்.

வெண்பா, ஆசிரியப் பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகிய பாவினங்களிலே நமது முன்னோர்கள் திளைத்து இருந்தார்கள். அப்பால் ஆரிய இலக்கியத்துடன் நெருங்கிய உறவு கொண்ட காரணத்தால் விருத்தப்பா வகைகளிலும் ஈடுபட நேர்ந்தது. கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பன் விருத்தப் பாவை வைத்துக்கொண்டே மகேந்திர ஜாலம் செய்து விட்டான். அவன் கண்ட வெற்றி எல்லையைத் தாண்ட வல்லவன் இனிமேல் தான் தோன்ற வேண்டும்.

இன்று சில்லரையான பா நடையே பெரு வழக்காக இருக்கிறது. பாவனை தேய்ந்து பகுத்தறிவு என்று சொல்லப்படுவது வளர்ந்து வருகிற காலம் இது. நிரந்தரமான பலன் வேண்டும் என்ற எண்ணமின்றி தற்காலிகத் தேவையைப் பூர்த்தி செய்யக் கூடிய துக்கடாக்களே, கவிதை என்று பெயரோடு புற்றீசல் போலப் புறப்பட்டு வருகிற காலம். ஆகவே அக்காலத்து பெரும் புலவர்களைப் போல பார காவியம் எழுதவல்ல கவிதைத் தச்சர்கள் தோன்றுவது அரிதாகவே இருக்கும். உண்மைத் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்ட புராணக் கதைகளையும், பழமையான ஐதிகங்களையும் நம்புதல், அவற்றின் மூலம் உருவாகும் பாவனைகளை இலக்கிய ஆக்கங்களில் கையாளுதல், ஆகிய காரியங்கள் இக்காலத்தில் விலையாக மாட்டா. இன்றுள்ள போர் முறையில் உடல் பலத்திற்கும், உளத் திண்மைக்கும், நியாய முறைக்கும் எவ்வாறு இடமில்லையோ அவ்வாறே பகுத்தறிவு வளர்ந்து பாவனை தேய்ந்து வரும் இக்காலத்தில் புராணக் கதைகளுக்கும், பழமையான ஐதிகங்களுக்கும், இன்று உதயமாகும் புத்திலக்கியங்களில் இடமில்லை.

ஆரிய இலக்கியங்களில் பயின்று வரும் கட்டுக்கோப்பையும், கதைகளில் காணப்படும் பாத்திரங்களின் பெயர்களையும் இன்னும் இதர அம்ஸங்களையும் நாம் தழுவிக் கொண்டதைப் போல ஐரோப்பிய இலக்கியங்களில் காணப்படும் கட்டுக்கோப்பையும், பாத்திரங்களின் பெயர்களையும், பிற அம்ஸங்களையும் நாம் தழுவிக் கொள்ளவில்லை; தழுவிக்

கொள்ளவும் முடியாது. எனென்றால், அது அத்தனையும் நமக்கு ஒவ்வாத காரியம். நம் முடைய மரபு வேறு, பாவனை வேறு, மனப் பான்மை வேறு, ஒழுக்கக் கோட்பாடுகள் வேறு, அணுகும் முறையும் வேறு.

இன்னும் பார்த்தால், கருத்தை வெளியிடு கிற முறையிலும் அவர்களுடைய முறை நம்மையும் தம் வழிக்கு இழுத்துச் செல்லும். உதாரணமாக ஒன்றைப் பார்ப்போம். ஒரு பிராணிக்குத் துயர் இழைத்தால் தெய்வ கோபம் வரும். ஒரு பிராணியின் துயரத்தை அலட்சியம் செய்தால் நாட்டிற்கே கேடு வரும். ப்ளேக் என்ற ஆங்கிலக் கவிஞன் மிக அழகாக வெளிப்படுத்தியிருக்கிறான்.

A robin red breast in a cage
puts all Heaven in a rage
A dog starved at his master's gate
predicts the ruin of a state

இவ்வாறு கூறுகிறான் ஆங்கிலக் கவிஞன். இதை தமிழ்நாட்டுக் கவிஞர் தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள் இனிய தமிழில், செந் தமிழில், எவர்க்கும் ஆசை தரும் தமிழில் அழகாக வெளியிடுகிறார்கள். அவர்களுடைய வெளியீடு வெறும் மொழி பெயர்ப்பில்லை. ஏனென்றால், வெறும் மொழி பெயர்ப்பாக இருக்குமாயின் அது வைக்கோல் அடைத்த செத்த கன்றுக் குட்டிக் கூடாக, உருவ அள வில் பாட்டாக இருக்குமேயன்றி, கன்றுக்குட்டி எவ்வாறு ஜீவனற்றதாக இருக்குமோ அதே போன்று பாட்டும் உணர்ச்சியற்ற வார்த்தைக் கோவையாகவே இருக்கும். கவிமணி அவர் களின் மொழி பெயர்ப்பு முழுக்க முழுக்க தமிழ் மணமும், கவிதைப் பண்பும் கொண்டு திகழ்கிறது. இனி பாட்டைப் பார்ப்போம்.

''கூவிப் பறக்கும் ஒரு — கிளியினைக்
கூண்டில் அடைத்து வைத்தால்

தேவர் உலகம் எல்லாம் — அது சினத் தீயை
எழுப்பிடுமே.

மன்னிய சோலையிலே — ஒரு
குயில் வாடிவதங்கும் எனில்

கின்னரர் கிம்புருஷர் — தளர்ந்து தம்
கீதம் இழப்பர் ஐயோ.''

எப்படி யிருக்கிறது பார்த்தீர்களா? மரபு விரோதமற்ற முறையில் பிற மொழி இலக்கியத்திலுள்ளதை இன்னொரு இலக் கியத்தினுள் கொண்டு வருவதென்றால் எவ் வளவு திறமையான காரியம் அது, என்பதைக் காட்ட இது ஒன்றே போதுமான சான்று இல்லையா? இவ்வாறான முறையில் எத் தனை வெளிவருமாயினும், அத்தனையை-யும் பாராட்டி வரவேற்கலாம். மரபைக் குப்புறத் தள்ளிவிட்டு அசலுக்கு நகல் தீட்டு வதே அமைந்த காரியம் என்று கருதப்படு மாயின் அதனை நம்மால் வரவேற்க முடி யாது, வரவேற்கவும் கூடாது. மொழியைக் காத்து இலக்கிய வளர்ச்சிக்கு முறையாகத் துணை செய்யும் பொறுப்பு மரபுக்கு இருப்ப தால், மரபினைப் புறக்கணிப்பது அடாத செயலாகும். அது நமது மொழிக்குத்தான் என்பது இல்லை. பிற பல மொழியினரும் மரபைப் பெரிதும் பேணிப் பாதுகாத்தே வருகின்றனர். ஆதலினாலே தான் தமிழ்ப் பெருமக்கள் மறுக்கொனா மரபு என்றும், மாற்றொனா மரபு என்றும் மரபைப் பற்றிப் பேசும் பொழுது வலியுறுத்தி வந்திருக் கின்றனர்.



உலக மொழிகளுள் தொன்மையும் வளமும் நிரம்பிய ஒரு மொழி, நம் தமிழ் மொழி. எனவே இதனை உயர் தனிச் செம் மொழி எனத் தெரிந்துரைத்தனர் மொழி இயல் உணர்ந்தோர்.

ஒரு மொழி எவ்வளவுதான் பழமையும். வளமும் உள்ளதென்றாலும் அது முழு நிறைவானது என்று சொல்லவோ அன்றிக் கொள்ளவோ முடியாது. உலகம் நாளுக்கு நாள் பல துறைகளிலும் வளர்ந்துகொண்டே இருக்கிறது. அதற்கேற்ப மொழியும் தன்னை வளர்த்துக் கொண்டே ஆக வேண்டும். ஆனதால் எக்காலத்திலும், எம்மொழியும், முழு வளமும் பெற்று விட்டது, குறைவிலா நிறைவாகி விட்டது, என்ற நிலையை அடைதல் இயலாத ஒன்றாகும்.

அங்ஙனமே, நம் தாய் மொழியும் பல் வேறு துறைகளில் தன் வளத்தைப் பெருகும் அளவு வளர்த்துக் கொண்டேயிருக்க வேண்டும். வளர்ச்சிக்கு எல்லையும் இல்லை; முடிவும் இல்லை. இந்த உண்மையை உணர்பவர்களே தமிழ்த் தாயின் நன் மக்கள். உணர்வுடன் அமைந்து விடாமல் ஒல்லும் வழியில் எல்லாம் பணி புரிபவர்கள்தாம் தமிழன்னை நேற்ற மக்கள்.

நாம் வளர்க்க வேண்டிய துறைகள் பல. அவற்றுள் அகராதித் துறையும் ஒன்று. அது ஐரோப்பிய மொழிகளில் வளம்பெற வளர்ந்திருக்கிறது. நாம் மிகவும் பின் தங்கி விட்டோம். அகராதித் துறை என்று, ஒரு தனித்துறையே நம் பல்கலைக் கழகங்களில் இல்லை. அகராதிப் பணிக்கென்று தனிக் கழகங்களும் இல்லை. அதனாலேதான் அவ்வப்போது தோன்றும் புதிய சொற்களை யெல்லாம் கொண்ட சொல்லகராதிகள் கூடக் காலத்திற்குக் காலம் வெளிவர வில்லை.

சுமார் முப்பது ஆண்டுகட்கு முன்னர் சென்னைப் பல்கலைக் கழகம் தமிழ்ப் பேரக ராதி (Lexicon) ஒன்றை வெளியிட்டது. அருமையான, பயனுள்ள பணி அது. ஆனால் பல காரணங்களால் அதில் குறை களும், பிழைகளும், தவறுகளும் ஏற்பட்டு விட்டன. அது, இப்பொழுது முற்றிலும் விற்றுத் தீர்ந்து விட்டது. நல்ல முறையில், குறைகள் நிறைவு செய்யப்பட்டு, பிழைகள் திருத்தப்பட்டு, தவறுகள் களையப்பட்டு நல்ல முறையில் புது வெளியீடு (New Edition) வர வேண்டுமல்லவா? அதுதான் இல்லை; எழுத்துக் கோத்து, அச்சிட்டால் பிழைகளாவது திருந்தியிருக்கும். பழைய புத்தக ஏடுகளைப் படமெடுத்து, அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள். அதனால் இதை மறு அச்சீடு (Reprint) என்று கூடக் கூற முடி யாது. மறு பதிப்பு (Second impression) என்று தான் கூற வேண்டும். எவரையும் குறை கூறவேண்டும் என்ற நோக்கத்துடன் இதைச் சொல்ல வில்லை; அகராதித் துறை என்ற ஒரு தனித்துறை இல்லாமையால் விளையும் ஊனத்தைச் சுட்டிக் காட்டவே இதைச் சொல்கிறேன்.

வளர்ந்து வரும் உலகில் மொழிவளத் திற்குப் பல்வேறு துறை நூல்களைப் போலவே அகராதிகளும் தேவை. சொல்லக ராதி மட்டுமின்றிப் பல்வகை அகராதிகளும் இன்றியமையாதன; எனவே நமது மொழியில் அகராதி தோன்றிய வரலாற்றைச் சிறிது, மேற்போக்காகவே, பார்ப்போம்.

தொல்காப்பியம் சொல்லதிகாரத்தில், உரியியலில், 3 முதல் 90 வரையுள்ள 88 சூத்திரங்களில் 123 சொற்கட்குப் பொருள் கூறியிருப்பதிலிருந்து தொல்காப்பியர்தான் முதலில் சொற்பொருட் கோவை (Dictionary) செய்தவர் எனச் சிலர் கூறலாம். உரியியல் முதற் சூத்திரத்தில்,

''உரிச்சொல் கிளவி விரிக்கும் காலை,
..................
ஒரு சொல் பல பொருட்கு உரிமை,
தோன்றினும்,
பல சொல் ஒரு பொருட்கு உரிமை
தோன்றினும்,
..................
எச் சொல் ஆயினும், பொருள் வேறு
கிளத்தல்''

என்று வரையறை செய்வதிலிருந்து அகராதிக்கு இலக்கணம் வகுத்தார் எனக் கொள்வதே பொருந்தும். அன்றியும்,

''துவைத்தலும், சிலைத்தலும், இயம்பலும்,
இரங்கலும்,
இசைப் பொருட் கிளவி' என்மனார்
புலவர்'' (உரி: 60)

என்றும், உரி இயல் இறுதிச் சூத்திரத்தில்,

''அன்னபிறவும் ..................
பாங்குற உணர்தல்' என்மனார் புலவர்''

என்றும் கூறுவதிலிருந்து 'சொற்பொருட் கோவை' முறை, தமக்கு முற்பட்ட பழைய ஒரு நெறியே என்பதைத் தெளிவு படுத்துகிறார் என்றே கொள்ள வேண்டும். எனவே, சொற்பொருட்கோவை ஆக்கல் தொல்காப்பியர் காலத்துக்கு முற்பட்டது என்பது தேற்றம்.

அடிநாளில் சொற்பொருட்கோவைக்கு 'உரிச்சொல்' என்பதே பெயராக வழங்கி வந்தது என்பதை பிங்கல நிகண்டு, திவாகரம், உரிச்சொல் நிகண்டு, ஆகியவற்றின் பாயிரத்தாலும் நன்னூல் உரியியலில் வரும்.

''இன்னது இன்னுழி இன்னனம் இயலும்
என்று இசை நூலுள், குண, குணிப்
பெயர்கள்
சொல்லாம், பரத்தலில்; பிங்கலம் முதல்
ஆம்
நல்லோர் உரிச் சொலின் நயந்தனர்
கொளலே''
(சூத்: 460)

என்னும் சூத்திரத்தாலும் நன்குணர முடிகிறது. பின்வந்த உரையாசிரியர்கள் இதை ''உரிச்சொல் பனுவல்'' என வழங்கி வந்தமையும் இங்கே கருதற்பாலது. எனவே, கிட்டத்தட்ட 16ம் நூற்றாண்டு வரை உரிச்சொல் என்ற பெயர் வழக்கிலிருந்து வந்திருக்கிறது என்று கொள்ளலாம்.

16ம் நூற்றாண்டுக்குப் பின்னர் 'நிகண்டு' என்ற பெயர் தோன்றி, பெரு வழக்காய் ஆகி, நிலைபெற்றும் விட்டது. நிகண்டு என்ற பெயருடன் சுமார் முப்பது பனுவல்கள் காணக்கிடைக்கின்றன. அவற்றை எல்லாம் எடுத்து ஆய, இது இடமாகாது. நிகண்டு வகையில் காலத்தால் முற்பட்டது திவாகரம். அதை அடுத்து அதே காலத்தில் தோன்றியது பிங்கலம். இதில் மாறுபட்ட கருத்தும் உண்டு. அதைப்பற்றிய ஆராய்ச்சியும் இங்கு, இப்பொழுது தேவை இல்லை. பிங்கலம் முதலான நிகண்டுகளில் சொற்கள் அகர வரிசைப் படுத்தப்படவில்லை. எச் சொல் எங்கு வரும் என்பதற்கு வரையறை ஏதுமில்லை.

பின்னர் வந்த மண்டல புருடர்தான் தாம் இயற்றிய சூடாமணி நிகண்டில் ஒரு வரையறையைத் தோற்றுவித்தவர். சொற்கள் யாவும் எதுகை அடிப்படையில் அமையச் செய்தார். அவரைப் பின்பற்றி வேறு சிலரும் எதுகை நெறியைக் கைக்கொண்டனர். முதல் எழுத்தை நோக்கிச் சொற்கள் அகர வரிசைப் படுத்தப்படவில்லை என்றாலும், எதுகை நோக்கி, இரண்டாவது எழுத்தைக் கணித்து ''ககர எதுகை'' முதல் ''னகர எதுகை'' ஈறாக பதினெட்டுப் பிரிவில் அடக்கியுள்ளார். எனவே ஒரு சொல்லை அதன் இரண்டாவது எழுத்தைக் கொண்டு தேடிக் கண்டு கொள்ள ஒரு வழி ஏற்பட்டு விட்டது. சொற்பொருள் தொகையில் இது ஒரு முன்னேற்றப்படி எனலாம்.

முதன் முதலில் அகர வரிசையில் சொற்களை அமைக்கும் நெறி கி.பி. 1594ல் தோன்றிற்று. அதைத் தோற்றுவித்தவர்

இரேவண சித்தர் ஆவார். மேலை நாடுகளில் முதன்முதலாகத் தோன்றிய இத்தாலி மொழியகராதியின் காலம் கி.பி. 1612 தான். ஆகவே, இரேவண சித்தர்தான் உலகில் அகராதிக்குத் தந்தையாகிறார். அவர் காலத்தில் பெருவழக்காய் இருந்த 'நிகண்டு' என்ற சொல்லை மாற்ற விரும்பாமையாலே தான் தம்முடைய சொல்லகராதிக்கு ''அகராதி நிகண்டு'' எனப் பெயர் சூட்டினார் போலும்; இங்கும், சொல்லின் முதல் எழுத்து மட்டும் கணிக்கப்பட்டதே யன்றிப் பிற எழுத்துக்கள் கணிக்கப்பட வில்லை. அதற்குச் சுமார் நூறு ஆண்டுகட்குப் பின்னர் தான் ''அகராதி மோனை-ககராதி எதுகை'' என்ற முறையில் இரண்டாவதெழுத்தையும் கணிக்கத் தொடங்கினர். எல்லா எழுத்தையும் கணித்துச் சொற்கள் செவ்விய அகராதி முறையில் அமையச் செய்த பெருமை மேலை நாட்டிலிருந்து வந்த பாதிரிமார் களையே சாரும்.

அதற்குப் பிறகு சொல்லகராதிகள் பல தோன்றின என்றாலும், துறை பற்றிய அகராதிகள் மிகச் சிலவே வெளி வந்தன. மூலிகை அகராதி, வைத்திய அகராதி, சோதிட அகராதி, சித்தர்கள் அகராதி ஆகியவையே அவை. சொற்பொருளேயன்றி வரலாற்று விளக்க உரைகளுடன் கூடிய கலைக் களஞ்சியம் (Encyclopaedia) போன்ற முறையில் வந்த அகராதிகள் 'அபிதான கோசம்', 'அபிதான சிந்தாமணி' ஆகிய இரண்டும் ஆகும்.

அவையே அன்றி அண்மைக் காலத்தில் 'சிறப்புப் பெயர் அகராதி', 'ஆட்சிச் சொல்லகராதி', 'தமிழ்க் கலைச் சொற்கள்' போன்றவை சில வெளி வந்திருக்கின்றன. ஆனால் ஆங்கிலம், பிரஞ்சு, ஜர்மன், இத்தாலி, ஜப்பானியம், ருஷ்யம் முதலிய மொழிகளில் எத்தனை எத்தனையோ வகையான அகராதிகள் வந்து விட்ட பின்னரும் கூட, நாடு விடுதலை அடைந்து ஆண்டுகள் பல ஆகியும் கூட, இத்துறையில் போதிய கவனம் செலுத்தினோ மில்லை.

அகராதித் துறைக்கே வித்திட்ட, அவ் வழியில் முந்திச் சென்ற நாம்; இன்று, பின்னே புறப்பட்டவர்கள் பலருக்கும், பிந்திக் கிடக்கிறோம். இதை உணர்கிறபோது மனம் உட்கித் தலை குனிய வேண்டியவர்களாகவே யுள்ளோம். இத்துறையில் நாம் சிறந்த பயன் காண வேண்டுமென்றால் பெரும் பொருளும், பல வசதிகளும், பல்துறை அறிஞர்களின் துணையும் இன்றியமையாதவை.

எனவே, பல்கலைக் கழகமோ அன்றி அரசாங்க உதவி பெறும் நிறுவனங்களோ தாம் இதை ஏற்றுப் பயன் கொழிக்கும் வண்ணம் பணிபுரிய முடியும்.

அகராதித் துறையில் பணிபுரிய முன் வருபவர்கட்கு நல்ல தமிழறிவும், பன்னூற் பயிற்சியும், எந்நூலையும் புறக்கணிக்காத உளப்பாங்கும், சலிப்பற்ற ஊக்கமுடைமையும் நிரம்ப வேண்டும்.



# வானொலியும் தமிழ்ப் பண்பாடும்

- வானொலிக்குப் பொன்விழா! வானொலி நம் நாட்டில் தோன்றிப் பணி யாற்றத் தொடங்கி ஐம்பது ஆண்டுகள் (1978ன்படி) ஆகின்றன. வானொலி ஆற்றிய பணியை, அதனால் விளைந்த பயனை நாம் இங்கே நினைவு கூர்கிறோம்.

திருச்சிராப்பள்ளியிலே 1939-ஆம் ஆண்டில் வானொலி நிலையம் நிறுவப் பெற்றது. ஒரு சிறிய கட்டடத்தில் இடம் பெற்றது. அப்பொழுதிருந்தே எனக்கும் வானொலியுடன் தொடர்பு ஏற்பட்டது.

ரசிகமணி டி.கே.சி.; பண்டிதமணி கதிரேசச் செட்டியார்; நாவலர் வேங்கடசாமி நாட்டார்; பேராசிரியர் சீனிவாசராகவன்; அறிஞர் பால் நாடார் போன்ற எத்தனையோ மேதைகளுடன் பற்பல நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டதை யெல்லாம் மகிழ்ச்சியுடனும், பெருமையுடனும் நினைத்துப் பார்க்கிறேன்.

முப்பத்தெட்டாண்டுகளாக கம்பன் திரு நாள் நிகழ்ச்சிகளை ஒலிபரப்பிப் பயன் சுரந்து வரும் அருமைப்பாடுகள் கம்பன் கழகச் செயலாளனான என் மனத்திரையில் காட்சி யளிக்கின்றன.

தமிழ்ப் பண்பாடு என்றால் என்ன? தமிழர்தம் பண்பாடே தமிழ்ப்பண்பாடு! தமிழர் யார்? தமிழில் சிந்தித்து, தமிழில் பேசி, தமிழில் எழுதி, வாழ்பவர்களே தமிழர் ஆவர்!

இவர்களின் மொழி தமிழ்; தமிழ் என்ற சொல்லுக்கு இனிமை என்பது பொருள்; ''வண்டு தமிழ்ப் பாட்டிசைக்கும் தாமரை'' என்பான் கவிச்சக்கரவர்த்தி கம்பன். தமிழ் இனிமை பயப்பது; தமிழ் மொழி அநாதி யானது; அதாவது காலம் கணிக்க முடியாத அவ்வளவு பழமையானது. எனவே தான் கம்பன் ''என்றுமுள தென்தமிழ்'' என்று அறைகின்றான். ஆயிரம் ஆயிரம் ஆண்டு களாக வளர்ந்து வரும் ஒரு தனிச் செம்மொழி.

மொழியின் அமைப்பையும் வளத்தையும் கொண்டே அம் மொழியாளரின் நாகரி கத்தை, பண்பாட்டை கணித்தறியலாம்

மொழி ஒன்று :— அது தமிழ் !
வழி இரண்டு :— அவை ஒலி, வரி !
துறை மூன்று :— அவையே இயல்,
இசை, நாடகம் !
பயன் நான்கு :— அவை தாம் அறம்,
பொருள், இன்பம், வீடு!

எத்துறையில் நின்று எவ்வழி நோக் கினும் தமிழர் இலட்சியம் உறுதிப் பொரு ளான நாற்பயனையும் பெற இவ்வுலகில் வாழ்வாங்கு வாழ்வதே யாகும். எனவே தான்

''அறம், பொருள், இன்பம், வீடு
அடைதல் நூற்பயனே''

என்று தமிழர் இலக்கணம் வரம்பு கட்டும்.

தமிழர் தம் பண்பாட்டுக்கு கட்டளைக் கல்லாக விளங்குபவை; சங்க காலம் தொடங்கி வளர்ந்து வரும்:-

இலக்கிய இலக்கண நூல்கள்,
சிற்ப, ஓவிய, கட்டடக் கலைகள்,
இசைக்கருவிகள், பண்கள்,
பரதம் முதலிய நாடகக் கலைகள்
ஆடை, அணி ஆகியவைகள்,
தத்துவ நெறியுடன் இறையுணர்வு.

இவற்றிலெல்லாம் தமிழர் எத்துணையளவு ஓங்கி உயர்ந்திருக்கின்றனர் என்பதை உலகம் நன்கறியும். ஆனால் இவையெல் லாம் நீண்ட நெடுங்காலமாக அறிவாலும், செல்வத்தாலும், பதவியாலும் மேம்பட்டவர் கட்கே எளிதிற் கிட்டுவனவாக இருந்தன. வானொலி நிலையம் தோன்றிய பிறகே

இவை எவ்வித வேறுபாடு மின்றி யாவருக்கும் எளிதிற் கிட்டத் தொடங்கின. சுமார் நாற்பதாண்டுக் காலமாக வானொலியுடன் எனக்குள்ள தொடர்பும், அனுபவமுமே இப்படி இந்த உண்மையைக் கூறச் செய்கின்றன.

எத்தனை பாடகர்கள், எத்தனை இசை வாணர்கள், எத்தனை நாட்டிய மணிகள், எத்தனை நாடகக் கலைஞர்கள், எத்தனை இலக்கியப் புலவர்கள், எத்தனை கவிஞர்கள், எத்தனை நாட்டுக்கலை வித்தகர்கள், எத்தனை அருள் ஞானச் செல்வர்கள், எத்தனை அரசியல் அறிஞர்கள், எத்தனை பொருளாதார நிபுணர்கள், எத்தனை விவசாய விற்பன்னர்கள், எத்தனை தொழில் துறை மேதைகள், எத்தனை கல்வித் துறை வல்லுநர்கள், எத்தனை விஞ்ஞானப் பெருமக்கள், இவர்களை யெல்லாம் அழைத்து அறிமுகப் படுத்தி அவர்களைக் கொண்டு விளைத்தவற்றால் கிட்டிய பயனை அளவிட முடியுமா, என்ன?

'அருள்வாக்கு', 'அறவுரை', 'நெறி விளக்கம்', 'சான்றோர் வாக்கு' என்பன போன்ற எத்தனையோ தலைப்புகளில் மக்கள் மறந்து விட்ட எத்தனையோ நூல்களை எல்லாம் அம்பலத் தாட வைத்த அருமையை எவ்வளவு பாராட்டினும் தகும்!

எட்டுத் தொகை, பத்துப் பாட்டுத் தொடங்கி, திருக்குறள் கம்பராமாயணம் உள்பட, ஆத்திசூடி, கொன்றை வேந்தன், கூளப்பநாயக்கன் காதல் வரை, சான்றோர் பாடல், பெருங்காப்பியம், சிறு காப்பியம், குட்டிப் பிரபந்தங்கள் எல்லாம் வானொலியில் இடம் பெற்றுத் தமிழ்ப்பண்பாட்டினைத் தழைக்கச் செய்துள்ளன.

இஸ்லாமிய, கிறிஸ்தவ, சமண, பவுத்த இலக்கியச் சிறப்புகளை எல்லாம் ஒலிபரப்பி ஆன்ம நேய ஒருமைப்பாட்டை மலரச்செய்த மாண்பினை எண்ணும்தோறும் மனத்தில் மகிழ்ச்சி மணக்கின்றது.

இசைப்பயிற்சி நிகழ்ச்சி ஒன்றை அமைத்து, முறைப்படி இசை கற்பித்து வருவதை நாமறிவோம். வானொலியையே, ஆசிரியராகக் கொண்டு எத்தனையோ பேர் இசையில் வல்லவரானமையை நானறிவேன். அஃதன்றிப் பல காலமாகப் பதுங்கிக் கிடந்த எத்தனையோ அபூர்வப் பாடல்கள் அரங்கேறிப் பிரபலமானதையும் எண்ணினால் இதனால் விளைந்த நன்மை கொஞ்ச-நஞ்சமல்ல!

அன்றியும் சிறந்த இலக்கிய விழாக்களை எல்லாம் ஒலி பரப்பித் தமிழ்ப் பண்பாட்டுக்கு வானொலி ஆற்றும் பணியை அற்ப சொற்பமாக மதித்திட முடியாது! கடல் கடந்த நாடுகளிலிருந்து, இங்கிலாந்து, அமெரிக்கா, பீஜி, மலேசியா, சிங்கப்பூர் நாடுகளிலிருந்து, எனக்கு வந்துள்ள கடிதங்களைக் காணும் போதுதான் இதன் அருமையை நன்குணர்கிறேன்.

மேலும் ''வேறுபடு சமயமெல்லாம் புகுந்து பார்க்கின் மாறுபடும் கருத்தில்லை'' என்ற தமிழ்ப் பண்பாட்டிற் கேற்ப எல்லாச் சமயப் பெரியார்களையும் அழைத்து அவ்வச் சமய அருமைப்பாடுகளையும், தத்துவக் கருத்துக்களையும் விளக்கச் செய்வதால் சமயப் பொறை மட்டுமன்றிச் சமய சமரச உணர்வும் தழைக்கக் கண்டு மகிழ்கிறோம். இஃதன்றோ உண்மையான தமிழ்ப் பண்பாடு?

இப்படி யெல்லாம் தமிழ்ப் பண்பாடு செழிக்க, செழித்துத் தழைக்க, தழைத்து வளர, வளர்ந்து நிலைக்க, வானொலி நிலையம் ஆற்றிவரும் நற்பணியைக் கோடிக் கணக்கான தமிழ் மக்களுடன் கூடி மனங் குளிர, வாய் மணக்க வாழ்த்தி மகிழ்கிறேன்.

செந்தமிழர் பண்பாட்டைத்
தேயமெல்லாம் நன்குணரத்
தந்துவளர் வானொலி நீ
தாரணியில் — சந்ததமும்
கன்னித் தமிழ்மொழிபோல்,
கம்பன் கவிச்சுவைபோல்
மன்னிப் பொலிக வளர்ந்து!